மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

மாலை—25 15189



A No: 15189
Q 23

உரையாசிரியர்
ஆங்கீரஸ S வேங்கடேச சர்மா
சங்கரனடிமை

உ

## விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

---

## பொருளடக்கம்

15189

5-2

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## (சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

## மாலை—25

உரையாசிரியர் :

சிவபக்திப் பிரசாரமணி, திருத்தொண்டர்மாமணி,
சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ரப் பிரசார பூஷணம்,
சிவபுராணக் காவலர், சிவபுராணச் சக்கரவர்த்தி,

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
(சங்கரன் அடிமை)



பிரசுரம் :

ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா
43, ஏழாவது அவென்யூ
அசோகநகர், சென்னை - 600 083.

உரிமை பதிவு] 31-8-1992 [விலை. 6-00.



உ

சைவ சமயாசாரியர்

## நால்வர் துதி



| | | | |
|---|---|---|---|
| திருஞான சம்பந்த சுவாமிகள் | திருநாவுக் கரசு சுவாமிகள் | சுந்தர மூர்த்தி சுவாமிகள் | மாணிக்க வாசக சுவாமிகள் |

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம்போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும் - முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.



# திருஞானசம்பந்த சுவாமிகள்








புகலி வந்த புண்ணியன், கவுணியர் குலக் கொழுந்து, வாரணங்கு முலை உமையாள் குழைத்த செம்பொன் வள்ளத்தில் அமுதுண்ட வள்ளல், தமிழ் வேதம் தந்த பிரான், அருங்கலைச் சிறுமழ இளங்களிறு, நாளும் நல்லிசையால் நற்றமிழ் பரப்பிய

திருஞானசம்பந்த சுவாமிகள்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்



# ஸமர்ப்பணம்

## ஓம் காமாரயே நம:

சிவபிரானின் அருச்சனைக்குரிய சிவாஷ்டோத்தர சத நாமாவளி எனப்படும் 108 திருநாமங்களில் காமாரி என்பது 25-வது திருநாமமாகும். இத்திருநாமத்துக்கு மன்மதனை எரித்தவர் என்பது பொருள். பிரமவிட்டுணுக்கள் உள்பட முப்பத்து முக்கோடி தேவர், மற்றும் அனைத்து உலகில் உள்ளவர்கள் யாவரும் மன்மதனது மலர் வாளிகளால் தாக்குண்டு தம் நிலை அழிந்தவர்கள் என்பது புராணங்கள் கூறும் செய்தியாகும். ஆனால் எங்கும் வெற்றிகொண்ட மன்மதன் சிவ பெருமானின் மீது மலர்க்கணைகளை ஏவியபொழுது அவரது நெற்றிக்கண் பார்வையால் எரிந்து போனான் என்று ஸ்காந்த புராணம் (தமிழில் கந்தபுராணம்), ஸம்பவ காண்டம் (உற்பத்திக் காண்டம்), விரிவாகக் கூறும். சிவ பிரான் ஒருவரே காமனுக்கு வசப்படாதவர். என்பது அவரது பரத்துவத்தை தெற்றெனப் புலப்படுத்துவதாகும். இத்தகைய பரம்பொருளாம் சிவபெருமானை, ஓம் காமாரயே நம: என்னும் 25-வது திருநாமத்தினால் அருச்சனை செய்து, இந்த 25-வது தமிழ்மாலையை அப்பெருமானது திருவடிகளில் ஸமர்ப்பிக்கும் சிவபுண்ணியத்தைப் பெறுகின்றேன்.

ஆங்கீரஸ சர்மா.

சிவம். உரையாசிரியர்

5-2

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவ ஜயம்

# உரையாசிரியர் பணிவுரை

திருச்சிற்றம்பலம்

வயலார் மருகல் பதிதன்னில் வாளர வாற்கடியுண்(டு)
அயலா விழுந்த அவனுக் கிரங்கி அறிவழிந்த
கயலார் கருங்கண்ணி தன்துயர் தீர்த்த கருணைவெள்ளப்
புயலார் தருகையி னுன்என்னத் தோன்றிடும் புண்ணியமே.

திருச்சிற்றம்பலம்

—ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி—49
(11-ம் திருமுறை)

"திருமருகல் என்னும் தலத்தில் பாம்பினுல் கடியுண்டு இறந்த வணிகனை, அவனுடன் வந்த பெண்மணியின் துயர் கண்டு, அவனை உயிர்ப்பித்து அவளது துயரம் தீர்த்த கருணை வெள்ளப் புயலார்தரு கையினனுன திருஞானசம்பந்தப் பெருமானே! எனத்துதிக்கச் சிவபுண்ணியம் தோன்றிடும்" என்று நம்பியாண்டார் நம்பிகளால் துதித்துப் பாடப் பெற்ற கவுணியர்குல தீபத்தை, அப்பெருமானது பதிகங் களுக்கு உரை காணுதல் என்ற முறையில் யாமும் வழிபட்டு வருகின்றேம். இவ்வழிபாட்டு முறையில் இதுவரையில் 24 தமிழ்மாலைகளைப் பிரசுரித்துள்ளோம். இப்பொழுது பிரசுர மாகும் இந்த 25-வது தமிழ்மாலையில் திருஞானசம்பந்தப் பிள்ளையார் தமது ஐந்தாவது தலயாத்திரையில் தொடர்ந்து தரிசித்துப் பாடிய திருத்தலங்களில் திருவானைக்கா, திருப் பாற்றுறை, திருநெடுங்களம், மேலைத்திருக்காட்டுப்பள்ளி, திருக்கண்டியூர், திருச்சோற்றுத்துறை ஆகிய ஆறு திருத் தலங்களில் பாடியருளிய எட்டு திருப்பதிகங்களை வழக்கம் போல உரை விசேடங்களோடு கொடுத்துள்ளோம்.

சிவபக்தநேயர்கள் நமது தமிழ் மாலேகளை இதுவரையில் ஆதரித்தது போலவே இனியும் தொடர்ந்து ஆதரிக்க வேண்டுகிரும். 24 மாலேகள் வரையில் மட்டுமே சந்தா செலுத்தியுள்ள நேயர்கள் 25-வது முதல் 30-வது மாலே வரையுள்ள சந்தாவாகிய ரூபாய் முப்பது மட்டும் அனுப்பி உதவ வேண்டுகிரும்.

இதுவரையில் உதவியது போலவே இந்த மாலேக்கும் அரிய விளக்கம் தந்து உதவியவர்கள் இராணிப்பேட்டைப் புலவர் நக்கீரன் வழியடிமை திரு. பி. மா. சோமசுந்தரஞர், கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணுயிரம் ஆகியோராவர். தேவகோட்டை சைவசித்தாந்த சரபம் ஸ்ரீலஸ்ரீ தத்புருஷ தேசிகர் அவர்களும் அரிய கருத்துக்களை வழங்கியருளி ஞர்கள். மற்றும் கிருட்டினகிரிப் பேராசிரியர் Dr. P. K. வரதராசஞர் அவர்களும் சென்னே வித்துவான் திரு. அம்பை சங்கரஞர் அவர்களும் உதவிஞர்கள். இம்மாலே சிறக்க உதவிய அறிஞர் பெருமக்களாகிய இவர்கள் அனேவருக்கும் எமது மனமார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிரும்.

இந்த 25-வது தமிழ்மாலே வெளிவர முழுமையான பொருளுதவியைத் தாமாக முன்வந்து செய்தவர் கிருஷ்ண கிரிப் பேராசிரியர் Dr. P. K. வரதராசஞர் ஆவர். இப் பெரியார் சைவப்பற்றும் செந்தமிழ்ப் பற்றும் மிக்கவர். தமது சிந்தனேயைச் சிவனடிப்போதுக்கே ஆக்கிச் சிவ பிரான் மீது சில பிரபந்தங்களை இயற்றியுள்ளார். எமது விருப்பத்துக்கு இணங்கித் தம்மைப்பற்றிய சிறு குறிப்பையும் தமது உருவப்படத்தினேயும் இம்மலரில் சேர்க்க இசைவு தந்துள்ளார். பேராசிரியர் நீடு வாழ்க ! அவர்தம் சிவப் பணிகள் சிறக்க என வாழ்த்துகின்ரும்.

எல்லாம் சிவன் செயல்.

சிவம்,

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# வாழ்க வரதராசனூர்!

நமது மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்மாலை வரிசையில் இந்த 25வது மாலை பிரசுரிக்கத் தேவையான முழுத்தொகையையும் நன்கொடையாக அளித்து உதவிய டாக்டர் பெ. கு. வரதராஜன் அவர்கள் வள்ளலார் என்று பிரசித்தியாய் வழங்கும் இராமலிங்க அடிகளார் மரபிலே தோன்றியவர். அதற்கேற்பச் சிவநெறிச் செல்வராகவும், வள்ளலாகவும் திகழ்கின்றூர். இவருடைய முன்னோர்களில் பலர் பரம்பரையாக ஆசிரியப்பணி புரிந்தவர்கள் என்றும் அவர்களுள் சிலர் பெரும் புலவர்களாகவும் இருந்தனர் என்றும் தெரிகிறது.

இவர் சேலம் மாவட்டம் நாமக்கல்லையடுத்த பெரியபட்டி என்னும் கிராமத்தில் உபாத்தியாயர் என்றே பெருமதிப்புடன் அழைக்கப்பட்ட திரு. A. குப்புசாமி பிள்ளை, திருமதி. இலக்குமி அம்மையார் தம்பதிகளுக்கு 16-11-1929-ல் பிறந்தார். ''விளையும் பயிர் முளையிலே தெரியும்'' என்பதற்கேற்ப இளவயதிலேயே கல்வியில் ஆர்வங் கொண்ட இவர் நான்காவது வகுப்பு படிக்கும் பொழுதே கவிதைகள் புனைய ஆரம்பித்தார். பிற்காலத்தில் இவரது பாடல்கள் நாமக்கல் கவிஞர் திரு. வெ. இராமலிங்கம் பிள்ளை, திரு. கி. வா. ஜகன்னுதன் போன்ற பெரியோர்களால் பெரிதும் பாராட்டப்பட்டன.

1952 முதல் 1959 வரை உயர்நிலைப் பள்ளிகளில் இடைநிலை ஆசிரியராகவும், 1959 முதல் 1972 ஆகஸ்டு முடியத் தலைமைத் தமிழாசிரியராகவும் 1972 செப்டம்பர் முதல் 1988 மே மாதம் பதவி ஒய்வு பெறும் வரை அரசு கலைக் கல்லூரியில் உதகையில் ஓராண்டும், கிருஷ்ணகிரியில்

தொடர்ந்து பதினைந்து ஆண்டுகளும் தமிழ்ப்பணி ஆற்றி யுள்ளார், தாம் அவ்வப்பொழுது பெற்ற உயர்பதவி களுக்குத் தேவையான கல்வித்தகுதிகளைத் தமது சொந்த முயற்சியால்—பேருழைப்பினால் - பெற்றார். உயர்நிலைப் பள்ளி இடைநிலை ஆசிரியர் பதவியிலிருந்து கல்லூரிப் பேராசிரியர் பதவிக்கு உயர்ந்து 'முயற்சி திருவினையாக்கும்' என்னும் வாய்மை மொழிக்கு இலக்கியமாகத் திகழ்கின்றார் நம் பேராசிரியர்.

தாம் ஆற்றிய கல்விப்பணிகளுக்குத் தேவையான வித்துவான், பி. ஓ. எல்., எம். ஏ., பி. டி., பி. எச்டி., முதலிய பட்டங்கள் பெற்றதோடன்றி, ஆசுகவி, புலவரேறு கவிஞர்கோமான், அருட்கவி முதலிய விருதுகளையும் பெற்றுள்ளார். திருமுறைகளில் ஆழ்ந்த பற்றும் ஆராய்ச்சி யுமுடைய இவர் 11ம் திருமுறையில் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பிகளுடைய பிரபந்தங்களை ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றார். இந்த ஆய்வு தொடர் பாகத் திருநாரையூர் சென்றபொழுது நம்பியாண்டார் நம்பிகளுக்கு அருள்செய்த பொல்லாப் பிள்ளையாரின் அருள் வலையில் அகப்பட்டார். அதன் விளைவாகத் தோன்றிய வையே திருநாரையூர்ப். பொல்லாப் பிள்ளையார் பல்சந்த விருத்தப்பதிகம், திருநாரையூர் பொல்லாப் பிள்ளையார் அட்டபுட்பமாலை, நம்பியாண்டார் நம்பி - ஓர் அறிமுகம் போன்ற நூல்கள் ஆகும். ஆனந்த விகடனில் ஒரு கட்டுரை எழுதி அதன் மூலம் திருநாரையூர் ஆலயப் பூஜைக் கட்டளை நிதிக்குப் பொருள் சேரும்படியும் செய்தார். அன்பும், பண்பும், அடக்கமும் நிறைந்து தமது மனைவியார், மகன்கள் பேரப்பிள்ளைகள் ஆகியோர்களோடு வாழ்வாங்கு வாழ்ந்து வரும் இந்த உ.த்தம நண்பர் நீடூழி வாழ்ந்து மேலும் மேலும் சிவப்பணிகள் செய்து சிறப்புடன் வாழ அருள்புரியுமாறு அம்மையப்பர் திருவடிகளை இறைஞ்சுகின்றோம்.

சிவம்.



பேராசிரியர்,

டாக்டர் பெ. கு. வரதராசன், M.A., B O.L., B.T., Ph.D
கிருஷ்ணகிரி.

''பால்புரை பிறைநுதற் பொலிந்தசென்னி
நிலமணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே''.

—ஔவையார்.

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவ ஜயம்



# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை-25

## திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியவை

(தொடர்ச்சி)

## திருவானைக்கா-1

பதிகவரலாறு : திருச்சிராப்பள்ளியில் செழுஞ்சுடரைப் பணிந்து பாடி உள்ளம் குளிர்ந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார், திருவானைக்காவை வணங்கும் விருப்பத்தோடு அங்கு வந்து சேர்ந்தார். விண்ணவர்கள் போற்றி செய்யும்

திருவானைக்காவில் வெண்ணாவல் மேவிய மெய்ப்பொருளை நண்ணி இறைஞ்சி திருமுன்பு வீழ்ந்து எழுந்து வெள்ளை யானை வழிபட்டதுவும் கோச்செங்கட்சோழநாயனார் செய்த அடிமையையும் வைத்துச் செஞ்சொற்றொடையில் பாடிப் பரவிய பண்ணுறு செந்தமிழ்மாலை இத்திருப்பதிகம்.

பண்—இந்தளம்] திருச்சிற்றம்பலம் [2-ம் திருமுறை

மழையார் மிடறு மழுவா ளுடையாய்
உழையார் கரவா உமையாள் கணவா
விழவா ரும்வெண்ணா வலின்மே வியஎம்
அழகா எனும் ஆயிழையாள் அவளே. 1

பதிகப்பொழிப்புரை:—*1.* மேகம் போலக் கறுத்த திருக் கழுத்தையுடையவனே! மழுவென்னும் படைக்கலனை யுடையவனே! மானேந்திய திருக்கையினனே! உமாதேவி யாரின் கணவனே! திருவிழாக்கள் நிறைந்ததும் வெண்ணா வல் மரத்தைத் தலவிருட்சமாகக் கொண்டதுமான இத் தலத்தில் விரும்பி எழுந்தருளியுள்ள அழகனே! என்று (எனது மகளாகிய) இவ்வாயிழையாள் (இறைவனை) அழைப்பாள்.

மழை - மேகம்; உழை - மான்; வெண்நாவல் - தலத்து விருட்சம், இங்கு தலத்தைக் குறித்தது. ஜம்புகேச்வரம் என்பது வடமொழிப் பெயர். ஆயிழையாள் - ஆராய்ந்து இழைத்த ஆபரணங்களை அணிந்தவள்.

இத்திருப்பதிகத்தில் திருக்கடைக்காப்பு நீங்கலாக ஏனைய திருப்பாடல்கள் அனைத்தும் அகப்பொருட்டுறையில் அமைந்தவையாகும். தலைவியின் நிலைகண்டு இரங்கிக் கூறும் செவிலித்தாய் அல்லது நற்றாய் கூற்றாகக் கொள்க.

"தலைவனுக்கு மனந்தந்து வருந்தும் தலைவியின் செவிலித்தாய் கூற்றாகிய அகப்பொருட்கருத்தில் அமைந்தது இத்திருப்பதிகம். உயிர்நாயகராகிய இறைவரது அருட்

பெருக்கில் ஈடுபட்டுத் தம் வயமிழந்து நிற்றல் வேண்டுமென்பது வழிப்படுத்தும் முறை'' (சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்களின் பெரிய புராணப் பேருரையில் உள்ள பதிகக்குறிப்பு).

''பதிகம் முழுவதும் அகப்பொருள் துறையே, செவிலி கூற்றை நற்றாய் கூற்றாகவுங் கொள்ளலாம். இறைவனைத் தலைவனாகவும் ஆன்மாவைத் தலைவியாகவும், செவிலி அல்லது நற்றாயைக் குருவாகவும் வைத்துப் பொருள் சிந்திக்க'' (கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணாயிரம் அவர்கள் உதவிய குறிப்பு).

கொலையார் கரியின் உரிமூ டியனே
மலையார் சிலையா வளைவித் தவனே
விலையா லெனையா ளும்வெண ணாவலுளாய்
நிலையா அருளாய் எனும் நேரிழையே. 2

2. கொலைத்தொழிலையுடைய யானையின் தோலைப் போர்த்தியவனே! மேருமலையை வில்லாக வளைத்தவனே! விலை கொடுத்து என்னை ஆளும் வெண்ணாவல் மரத்தடியில் வீற்றிருப்பவனே! நிலைத்த அருளையுடையவனே! என்று (என் மகளாகிய) இந்நேரிழையாள் அழைப்பாள்.

விலையால் எனையாளும் - தனு, கரண, புவன, போகங்களாகிய விலையைக் கொடுத்து என்னை அடிமையாக வாங்கி ஆளும் என்றவாறு. (கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணாயிரம் அவர்கள் உதவிய கருத்து). இவ்வாறின்றி, 'இது தன்னை அடிமைகொண்டதைக் குறிப்பது. பதிகரணமாகிய விலையைக் கொடுத்து, பசுபோதத்தை வாங்கித் தன்னை மீளாவடிமை கொண்டது. ''மீளா அடிமை உமக்கே ஆளாய்'' எனவும் ''விற்றுக் கொள்வீர், ஒற்றியல்லேன், விரும்பியாட்பட்டேன்'' எனவும் சுந்தரர் பெருமான் கூறல் காண்க' என்பது இராணிப்பேட்டை புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனார் அவர்கள் உதவிய

குறிப்புரை. 'ஞானமாகிய விலைதந்து அடிமை கோடல், ஞானப்பால் தந்து அடிமை கொண்ட வரலாறு நினைவு கூர்க' எனவும் திரு. பி. மா. சோ அவர்கள் குறிப்பிட்டுள்ளார்கள்.

நிலையா அருளாய் - அலைவின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையாக அருள்க என்று தலைவி கூறியதாம். இவ்வா றின்றி நிலையா அருளாய் என்பதை விளியாக்கி நிலைத்த அருளையுடையவனே என்று கொள்ளலாம். அல்லது நிலையா என்பதைத் தனி விளியாக்கி அழிவற்று என்றும் நிலையாக இருப்பவனே எனவும் கொள்ளலாம்.

நேரிழை—நுண்ணிய வேலைப்பாடமைந்த ஆபரணம். இங்கு அதனையணிந்த பெண்ணைக் குறித்தது. அன்மொழித் தொகை என்பர் இலக்கண நூலார்.

காலா லுயிர்கா லனைவீ டுசெய்தாய்
பாலோ டுநெய்யா டியபால் வணனே
வேலா டுகையா யெம்வெண் ணுவலுளாய்
ஆலார் நிழலாய் எனும் ஆயிழையே. 3

3. இயமனைக் காலால் உதைத்து உயிரைப் போக்கியவனே! பாலுடன் நெய் தயிர் இவற்றையும் அபிஷேகங் கொண்ட பால்வண்ணனே! வேல் (இங்குச் சூலத்தைக் குறித்தது) விளங்கும் திருக்கரத்தையுடையவனே! வெண்ணுவல் மரத்தடியில் எழுந்தருளியவனே! ஆலமரத்து நிழலில் அமர்ந்து அறமுரைத்தவனே! என்று ஆயிழையாள் (என் மகள்) கூறுவாள்.

பால்வணன்—இத்தலத்து இறைவனுக்கு வழங்கிய திருப் பெயர். (திருத்தருமையாதீன உரைக்குறிப்பு) ஆயிழை இதுவும் அன்மொழித்தொகை. ஆய்ந்து இழைத்த ஆபரணத்தைக் குறித்து அதனையணிந்த பெண்ணைக் குறித்தது.

ஊறவக் கொடிகொண் டவன்நீ றதுவாய்
உறநெற் றிவிழித் தவெம்உத் தமனே
விறல்மிக் ககரிக் கருள்செய் தவனே
அறமிக் கதுவென் னுமென் ஆயிழையே. 4

4. மீன்கொடி கொண்டவனாகிய மன்மதன் சாம்பலா கும்படி நெற்றிக்கண்ணால் பார்த்த எம் உத்தமனே! வலிமை மிக்க யானைக்கு அருள்செய்தவனே! (உனக்கு) அறமே பெரிது (போலும்) என்று ஆயிழை புலம்புவாள்.

மன்மதனை நெற்றிக்கண்ணால் எரித்த வரலாறு கந்த புராணம், உற்பத்திக்காண்டம் காமதகனப் படலத்தில் காண்க. வலிமை மிக்க யானைக்கு அருள் செய்தமையை தலவரலாற்றுப் பகுதியில் கூறுவோம். ஆண்டுக் காண்க.

அறமிக்கது—தலைவன் கல்வி, உற்றுழி உதவி, தூது, அறம்காத்தல் முதலிய வினைகளை மேற்கொண்டு தலைவியைப் பிரிவான். தன்னைப் பிரிந்தால் நான் உயிர் வாழேன் என்பது நன்கு தெரிந்திருந்தும் அறம்காவல் கருதிப்பிரிந்தனனே, ஆயின் என் உயிரினும் அறமே தலைவனுக்குப் பெரிது போலும். (இராணிப்பேட்டை புலவர் திரு. பி. மா. சோ அவர்கள் உதவிய கருத்து).

செங்கட் பெயர்கொண் டவன்செம் பியர்கோன்
அங்கட் கருணை பெரிதா யவனே
வெங்கண் விடையா யெம்வெண் ணாவலுளாய்
அங்கத் தயர்வா யினள் ஆயிழையே. 5

5. கோச்செங்கட்சோழன் என்ற பெயரைக்கொண்டவனாகிய சோழமன்னனுக்குக் கண்ணுக்கு அழகாகிய கருணையைப் பெரிதும் புரிந்தவனே! வெங்கண் விடையாய்! வெண்ணாவல் மரத்தடியில் எழுந்தருளியவனே! ஆயிழை யாகிய என் மகள் உடல் சோர்வு ஆயினள். (இது காதல் மிகுதியால் நேர்ந்தது. அவள் மேலும் சோர்வடையாது

சோழமன்னனுக்குக் காட்டிய அதே கருணையை இவள் மாட்டும் காட்டியருள்வாயாக என்றவாறு)

வெங்கண் விடையாய்—விடையின் கண்ணில் தோன்றும் வெம்மை அதன் சினத்தைக் குறித்தது. வெம்மை-விருப்பம் எனக்கொண்டு காண்பார்க்கு விருப்பந்தரும் கண் எனலு மாம். அங்கம்—உடல்; அயர்வு—சோர்வு.

குன்றே யமர்வாய் கொலையார் புலியின்
தன்தோ லுடையாய் சடையாய் பிறையாய்
வென்றாய் புரமூன் றைவெண் ணெய்நல்லூர்
நின்றாய் அருளாய் எனும் நேரிழையே. 6-7

6—7. திருக்கயிலாய மலையினையே விரும்பி எழுந்தருள் பவனே! கொலைத்தொழில் பொருந்திய புலியின் தோலை உடையாக அணிந்தவனே! சடை முடியாய்! அச்சடையின் மீது பிறைச்சந்திரனைச் சூடியவனே! முப்புரங்களையும் வென்றவனே! வெண்ணுவலைத் தலவிருட்சமாகக் கொண்ட இத்தலத்தே நிலையாக எழுந்தருளியவனே! அருள் புரிவாய் என்று (என் மகளாகிய) நேரிழையாள் கூறுவாள்.

மலையன் றெடுத்த அரக்கன் முடிதோள்
தொலையவ் விரலூன் றியதூ மழுவா
விலையா லெனையா ளும்வெண் ணெய்நல்லூர்
அலசா மல்நல்காய் எனும் ஆயிழையே. 8

8. அன்று திருக்கயிலாய மலையைப் பெயர்த்தெடுக்க முயன்ற இராவணனது முடிகளும் தோள்களும் நொறுங்கும் படி திருக்கால்விரலை யூன்றிய தூமழுவாளனே! விலையால் என்னை ஆட்கொள்ளும் வெண்ணுவல் மரத்தடியில் எழுந் தருளியவனே! என்னை மேலும் வருத்தாமல் வந்து திருவருளை நல்கிடுவாய் என்று ஆயிழை கூறுவாள்.

அன்று — பண்டறிசுட்டு: இராவணன் மலையைப் பெயர்க்க முயன்ற காலத்தைக் குறித்தது.

விலையால் எனை ஆளும்—இரண்டாவது திருப்பாடலில் கூறப்பட்ட விளக்கத்தையே இங்கும் கொள்க. அலசாமல்—அலைக்காமல், வருத்தாமல்; நல்காய்—வந்து இன்பம் நல்கியருள்வாய்.

திருவார் தருநா ரணன்நான் முகனும்
மருவா வெருவா அழலாய் நிமிர்ந்தாய்
விரையா ரும்வெணு வலுள்மே வியஎம்
அரவா எனும் ஆயிழையா ளவளே. 9

9. திருமகள் (மார்பிலே) பொருந்திய திருமாலும், நான்முகனும் அருகிலணைந்து அறிய முடியாமல் அச்சமுறும் படி பேரழற் பிழம்பாய் நிமிர்ந்தவனே! மணம் நிறைந்த வெண்ணாவல் மரத்தடியில் விரும்பி எழுந்தருளிய எமது அரவாபரணம் அணிந்தவனே என (என் மகளாகிய) ஆயிழையாள் (வருந்திக்) கூறுவாள்.

அழலாய் நிமிர்தல்-அழற்றூணாக ஓங்கி வானளாவி நிற்றல்.

புத்தர் பலரோ டமண்பொய்த் தவர்கள்
ஒத்தவ் வுரைசொல் லிவையோ ரகிலார்
மெய்த்தே வர்வணங் கும்வெணு வலுளாய்
அத்தா அருளாய் எனும் ஆயிழையே. 10

10. பல உட்பிரிவினர்களாகிய பௌத்தர்களோடு பொய்த்தவம் புரிபவர்களாகிய சமணர்களும், சிவபரத் துவத்துக்கு பொருந்தும் மொழிகளாகிய எமது மொழிகளை உணரும் ஆற்றலில்லாதவர்களாவர். மெய்ப்பொருளாகிய சிவபெருமானை வழிபடும் (பிரம்ம விட்டுணு இந்திரன் மற்றும் முப்பத்து முக்கோடி தேவர்கள் வந்து வணங்கும் வெண்ணாவலைத் தலவிருட்சமாகக் கொண்ட இத்தலத்தில் எழுந்தருளியவனே! என் தெய்வமே! அருள்புரிவாய் என்று (என் மகளாகிய) ஆயிழையாள் கூறுவாள்,

பொய்த்தவர்கள்—தவம் என்று அவஞ்செய்யும் பௌத்தர்களும் சமணர்களும்.

மெய்த்தேவர்—மெய்ப்பொருளாகிய சிவபிரானை வழிபடும் தேவர்கள். (கோவை திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் உரைக் குறிப்பு).

மெய்த்தேவர்—சமணரும் புத்தரும் சைவரைப் போலவே இந்திரன் முதலிய தேவர்கள் இருப்பை ஒப்புவரேனும் அவர் கூறும் அத்தேவர்க்கும் வேதங்கூறும் தேவர்க்கும் பெரிதும் வேறுபாடு உண்டு என்பதை உணர்த்த மெய்த்தேவர் என்றூர். (புலவர் திரு. பி. மா. சோ அவர்கள்)

வெண்ணு வலமர்ந் துறைவே தியனைக்
கண்ணூர் கமழ்கா ழியர்தந் தலைவன்
பண்ணோ டிவைபா டியபத் தும்வல்லார்
விண்ணோ ரவரேத் தவிரும் புவரே. 11

திருச்சிற்றம்பலம்

*11.* வெண்ணுவலைத் தலமரமாகக் கொண்ட இத்தலத்தில் விருப்பத்துடன் எழுந்தருளியிருக்கும் வேதியனைப் பெருமை நிறைந்ததும் (தெய்வ) மணங்கமழ்வதுமான சீகாழி மக்களின் தலைவனுன திருஞானசம்பந்தன் பண்ணோடுபாடிய இப்பத்துப் பாடல்களையும் பாடவல்லவர்களை தேவர்களும் தொழ விரும்புவார்கள். (அவர்கள் தேவர்களாலும் தொழப்படும் பெருமை பெறுவார்கள் என்பதாம்).

வேதியன்—வேதங்களைப் படைத்தவன், வேதங்களால் அறியப்படுபவன், வேதங்களின் உட்பொருளானவன். கண் - அறிவு, பெருமை. கமழ்தல் - பரவுதல், இங்குத் தெய்வமணம் பரவுதலின் மேற்று; அறிவு அல்லது ஞானம் நிரம்பி மணம் பரப்பும் எனவுங்கொள்ளலாம்.

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# திருவானைக்கா-2

பதிகவரலாறு:—முன் திருப்பதிகவரலாற்றையே இப் பதிகத்துக்கும் கொள்க.

பண்—கௌசிகம்] திருவிராகம் [3-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

வானைக்காவில் வெண்மதி மல்குபுல்கு வார்சடைத்
தேனைக்காவில் இன்மொழித் தேவிபாக மாயினான்
ஆனைக்காவில் அண்ணலை அபயமாக வாழ்பவர்
ஏனைக்காவல் வேண்டுவார்க் கேதும்ஏதம் இல்லையே. 1

பதிகப்பொழிப்புரை:—1. அழகிய மேலான (பெருமையுடைய) காவலில் உள்ள ஒளிவிடும் வெண்மதி பொருந்திய நீண்ட சடையையுடையவனும், தேனின் இனிமை தங்கியமொழியையுடைய உமாதேவியார் ஒருபாகமாக ஆனவனும், திருவானைக்காவில் எழுந்தருளியிருக்கும் அண்ணலுமான சிவபெருமானைப் புகலாக அடைந்து வாழ்பவர்களுக்கு, வேறு காவல்களை வேண்டுபவர்களுக்கு நேரிடும் பெரியதுன்பங்கள் எவையும் இல்லை என்பதாம்.

வானைக்காவில் - ஐ வான் காவில் என மாற்றிப் பொருள் உரைக்கப்பட்டது. ஐ - அழகிய; வான் - மேலான அல்லது பெருமையுடைய, காஇல் காவலில், எனவே அழகிய மேலான காவலில் உள்ள வெண்மதி எனக் கொள்ளப் பட்டது. பேரழகனான சிவபிரானின் காவலில் உள்ளமையால் அஃது அழகிய காவலாயிற்று. ஏனையோர் காவலினும் மேம்பட்டதால் வான் காவலாயிற்று. அதனால் எஞ்சி நின்ற

திங்களின் ஒரு கலை அழியாமல் காக்கப் பெற்றது. (கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் உதவிய விளக்கம்.

சந்திரன் மேகங்களில் தவழ்ந்து செல்கிறுன். இறைவனது திருச்சடையில் மேகங்கள் உள்ளன. அங்ஙனம் மேகங்களை அரணுகக் கொண்டு விளங்கும் இல்லத்தில் நிலவும் வெண்மதி. (இராணிப்பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனுரது விளக்கம்).

தேனைக்காவில் இன்மொழி—தேனின் இனிமை கலந்திருக்கும் மொழி என்பதாம். தேவியின் குரலினிமையைச் சௌந்தர்யலஹரி என்னும் தோத்திர நூலில் ஆதிசங்கரர் பின் வருமாறு போற்றியிருப்பது இங்கு கருதற்குரியது.

''அம்பிகையின் திருமுன்னர் ஸரஸ்வதியானவள் பசுபதியான பரமேசுவரனுடைய பலவிதமான லீலைகளை வீணையில் பாடுகின்றுள். அப்பொழுது தேவியார் தமது தலையை அசைத்து ஸரஸ்வதியின் வீணுகானத்தை ஆமோதித்துச் சில பாராட்டுச் சொற்களைச் சொல்ல ஆரம்பிக்கிறுர். அந்தச் சில வார்த்தைகளை ஸரஸ்வதி கேட்டவுடன் அவற்றின் இனிமையை அறிந்து அதன் முன் தன் வீணையின் நாதம் தோல்வியுற்றதை உணர்கிறுள். உடனே தனது வீணையை உறையிட்டு வெளியில் தெரியாத வண்ணம் மூடிவிடுகிறுள்'' இதனுல் அம்பிகையின் குரலினிமை வீணையின் நாதத்தினும் இனிமையானது என்பது புலப்படுத்தப்படுகிறது. வேதாரண்யத்தில் அம்பிகைக்கு யாழைப்பழித்த மொழியாள் என்ற திருநாமம் வழங்குதலும் இங்குக் கருதுக.

ஏனைக்காவல் வேண்டுவார்க்கு ஏதுமேதம் இல்லையே—திருவானைக்காவில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானையே சரணுக வாழ்பவர்களுக்குத் தம்மைத்தாமே காத்துக் கொள்ளமுடியாமல் பிறர் துணை வேண்டும்

படியான அபாயம் ஏதும் நேராது என்பதாம். (திருத் தருமை உரைக்குறிப்பைத் தழுவியது).

சேறுபட்ட தண்வயற் சென்றுசென்று சேணுலா
ஆறுபட்ட நுண்டுறை யானைக்காவில் அண்ணலார்
நீறுபட்ட மேனியார் நிகரில்பாதம் ஏத்துவார்
வேறுபட்ட சிந்தையார் விண்ணிலெண்ண வல்லரே 2

2. சேற்றால் நிரம்பியுள்ள வயல்களிலெலாம் சென்று சென்று நெடுந்தொலைவு பாய்ந்து வருகின்ற ஆற்றங்கரையில் அமைக்கப்பட்ட சிறுதுறைகளையுடைய திருவானைக்காவில் எழுந்தருளியுள்ள தலைவரும், திருநீறுபூசிய திருமேனியினருமான சிவபெருமானின் ஒப்பற்ற திருவடிகளைத் துதிப்பவர்கள் வேறுபட்ட சிந்தையராகி முத்தியின்பத்தை அடைந்தவராகக் கருதத்தக்கவராவர்.

வேறுபட்ட சிந்தையர் - பசுகரணங்கள் பதிகரணங்களாக மாறிய அடியவர்கள் ''ஊனுயிர் வேறு செய்தான் நொடித் தான்மலை உத்தமனே'', (நம்பிகள் தேவாரம், திருநொடித் தான்மலை—1). விண் - இங்கு முத்தியைக் குறித்தது. வேறுபட்ட சிந்தையராகி ஜீவன் முத்தர்களாகச் சஞ்சரிப்பார்கள் என்பதாம்.

தாரமாய மாதராள் தானோர்பாக மாயினான்
ஈரமாய புன்சடை யேற்றதிங்கள் சூடினான்
ஆரமாய மார்புடை யானைக்காவில் அண்ணலை
வாரமாய் வணங்குவார் வல்வினைகள் மாயுமே. 3

3. உமாதேவியார் தனது ஒரு பாகத்தில் அமையப் பெற்றவனும், கங்கையின் நீரினால் ஈரமாகிய புன் சடையில் தான் அபயங்கொடுத்து ஏற்ற பிறைச் சந்திரனைச் சூடியவனும், (உறையூர்ச் சோழனின்) மணியாரத்தை ஏற்றருளிய திருமார்பை உடையவனும், திருவானைக்காவில் எழுந்

தருளிய தலைவனுமான சிவபெருமானை அன்புடன் வணங்கு பவர்களுடைய கொடிய வினைகள் யாவும் மாய்ந்துபோகும்.

தாரம்—மனைவி. ஈரமாயயுன்சடை - கங்கை நீரினால் நனைந்த சடை; ஆரமாயமார்பு - உறையூர்ச் சோழ மன்னன் ஒருவனின் மணியாரத்தை இறைவர் ஏற்றருளிய வரலாறு தல மகிமையில் காண்க. ஆரம் - சந்தனக்குழம்பு என்றும் கொள்ளலாம்.

விண்ணினண்ணு புல்கிய வீரமாய மால்விடைச்
சுண்ணவெண்ணீ றாடினான் சூலமேந்து கையினான்
அண்ணல் கண்ணொர் மூன்றினான் ஆனைக்காவு கைதொழ
எண்ணும் வண்ணம் வல்லவர்க் கேதமொன்றும் இல்லையே.

4. வைகுண்டத்தில் தங்கி, (திரிபுரமெரித்தபொழுது இறைவனை விடையாகத் தாங்கிய (வீரம் பொருந்திய திருமாலும் ஸர்வ சங்கார காலத்தில் சாம்பலாக அச்சாம் பலைப் பூசிக்கொண்டவனும், சூலபாணியும், முக்கண்ணனும் அண்ணலுமாகிய சிவபிரானைத் திருவானைக்கா சென்று கைதொழவேண்டும் என்று எண்ணுவதற்கு வல்லவர் களுக்கும் தீங்கு ஏதும் நேராது. (சென்று கைதொழா விடினும், தொழவேண்டும் என்ற எண்ணம் நிரம்பினவர் கட்கும் தீதில்லை என்பதாம்).

'கைதொழ எண்ணுபவர்க்கும் தியானிக்க வல்லவர்க் கும் தீங்கு எதுவும் நேராது என்பது இப்பாடலின் இறுதிப் பகுதியின் பொருள்'. (திருத்தருமையாதீனக்குறிப்புரை).

கைதொழ எண்ணும் வண்ணம் வல்லவர்க்கு—'எண்ணும் வண்ணம் கைதொழ வல்லவர்க்கு' என மாற்றித் தியானித் தில் தொழுதுப் பின்னர் அவ்விதமே புறத்திலும் பூசிக்க வல்லவர்க்கு என உரைக்க. அந்தரியாகம், புறப்பூசை இரண்டும் ஆன்மார்த்த பூசையின் முக்கிய அங்கங்கள். (கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் உதவிய விளக்கம்).

வெய்யபாவங் கைவிட வேண்டுவீர்கள் ஆண்டசீர்
மைகொள்கண்டன் வெய்யதீ மாலையாடு காதலான்
கொய்யவிண்ட நாண்மலர்க் கொன்றைதுன்று
சென்னியெம்
ஐயன்மேய பொய்கைசூழ் ஆனைக்காவு சேர்மினே. 5

5. கொடிய பாவங்கள் உங்களை விட்டு நீங்க வேண்டுமென்று விரும்பும் மக்களே! பெருமை தங்கிய கருநிறம் கொண்ட திருக்கழுத்தையுடையவனும், வெப்பம்மிக்க தீயோடு நள்ளிரவிலே ஆடுதலில் விருப்பமுடையவனும், கொய்ய அப்பொழுதே மலர்ந்த புதிய கொன்றை மலர் அடர்ந்த சென்னியனும், என் ஐயனுமான சிவபெருமான் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள, பொய்கைகள் சூழ்ந்த திருவானைக்கா சென்று அடையுங்கள். [அங்குச் சென்று இறைவனை வழிபடுங்கள் என்பதே சுவாமிகளின் திருவுள்ளக் குறிப்பாகும்].

ஆண்டசீர் மைகொள்கண்டன்—சீர் ஆண்ட எனமாற்றிப் பொருள் கொள்க. தேவர்களும், அசுரர்களும் மற்றவர்களும்இறவாது காத்த கருநிறக் கண்டம் ஆகையால் சீர் ஆண்ட மைகொள்கண்டன் என்று கூறினர். மாலை - இங்கு இரவு என்ற பொருளில் வந்தது. அது ஸர்வ சங்கார காலத்தைக் குறித்தது. 'நள்ளிரவில் நட்டம் பயின்றாடு நாதனே' என்ற திருவாசகம் (சிவபுராணம் - 89)காண்க.

நானுமோர்வும் சார்வுமுன் நகையுமுட்கு நன்மையும்
பேணுறாத செல்வமும் பேசநின்ற பெற்றியான்
ஆணும்பெண்ணு மாகிய ஆனைக்காவில் அண்ணலார்
காணும்கண்ணு மூன்றுடைக் கறைகொள்மிடறன்
அல்லனே. 6

6. பிறகடவுளர் அனைவரும் நாணத்தக்க ஞானமும் அனைத்து உயிர்களுக்கும் பற்றுக் கோடாவதற்குரிய தலைமை.

யும், (ஐச்வர்யமும்) எவருக்கும் முற்பட்ட மகிழ்ச்சியளிக்கும் புகழும், எவரும் அஞ்சத்தக்க வீர்யமும், நன்மையும், விருப்பம் உருதசெல்வமும் ஆகிய ஆறுகுணங்களையும் அடிய வர்கள் போற்றிப் பேசும்படி நிலைபெற்ற தன்மையன், ஒரு பக்கம் ஆணுருவும் மற்றபக்கம் பெண்ணுருவுமான அர்த்த நாரீசுவரத் திருக்கோலமுடையவனும், திருவானைக்காவில் எழுந்தருளியிருக்கும் தலைவனும் முக்கண்ணனும், நீல மிடற்றினனுமான சிவபிரானேயன்றோ?

இத்திருப்பாடல் சிவபிரானே பகவான் என்னும் திரு நாமத்துக்கு உரியவர் என்பது நுதலிற்று. ஐச்வர்யம் வீர்யம், ஞானம், புகழ், செல்வம், வைராக்கியம் என்பவை ஆறும் சேர்ந்து பகம் எனப்படும். இதனையுடையவன் பகவான் அல்லது பகவன் எனப்படுவான். இத்திருநாமம் சிவபிரானுக்கே பொருத்தமாகி மற்றக் கடவுளர் விஷயத் தில் உபசாரமாகும். நன்மை என்பது இடம் நோக்கிவைராக் யத்தையும், பேணுருத செல்வம் என்பது இனித்தாமடைய வேண்டியது என்பது ஒன்றுமில்லாமல் அனைத்துச் செல்வ மும் ஒருங்கே இயல்பாக அமைந்த தன்மையையும் குறித் தது. எனவே பிள்ளையார் இத்திருப்பாடலில் அருளிச்செய்த ஆறுகுணங்களும் பகம் என்னும் தொகுதியில் அமைந்த இறைமைக் குணங்களாயினவாறு கண்டு கொள்க.

கூருமாலை நண்பகற் கூடிவல்ல தொண்டர்கள்
பேருமூருஞ் செல்வமும் பேசநின்ற பெற்றியான்
பாரும்விண்ணும் கைதொழப் பாயுங்கங்கை செஞ்சடை
ஆரநீரோ டேந்தினான் ஆனைக்காவு சேர்மினே. 7

7. வழிபாட்டுக்குச் சிறந்த நேரமான மாலை, நண்பகல் (உபலட்சணமாக) காலை ஆகிய மூன்று நேரங்களிலும் திருத்தொண்டிலே உறைப்புள்ள அடியவர்கள் கூடிப் பெரு மானது ஊர், பெயர், செல்வம் ஆகியவற்றின் பெருமை களையெல்லாம் கொண்டாடிப் பேச நின்ற தன்மையனும்,

நிலவுலகம்—வானுலகம் இவற்றோடு மற்ற உலகங்களும் கை தொழும்படி, வேகமாகப் பாய்ந்த கங்கையைத் தாங்கிய திருச்சடையில் திருமஞ்சன நீரோடு (உறையூர்ச் சோழனின்) மணியாரத்தையும் ஏந்தினவனான சிவபிரானது திருவானைக்காவைச் சென்றடையுங்கள்.

கூருமாலை—இறைவழிபாட்டுக்கு உரிய காலம் இரவு. அமைதி காத்த நேரமாதலின் மனம் அடங்க இயலும். பகலில் எவ்வளவு முயன்றாலும் இடையூறு இருக்கும். எனவே மாலை முதல் காலை ஆறு வரை நல்லநேரமாகும் என வழிபாட்டுக்குச் சிறந்த என்ற பொருளில் கூரும் என வந்தது. (இராணிப்பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனாரது விளக்கம்).

பொன்னமல்கு தாமரைப் போதுதாது வண்டினம்
அன்னமல்கு தண்டுறை ஆனைக்காவில் அண்ணலைப்
பன்னவல்ல நான்மறை பாடவல்ல தன்மையோர்
முன்னவல்லர் மொய்கழல் துன்னவல்லர் விண்ணையே. 8

8. பொன்னிறம் செறிந்த தாதுக்கள் நிறைந்த தாமரைப் போதுகளில் வண்டுகளின் கூட்டமும், அன்னங்களும் நிறைந்த குளிர்ச்சிபொருந்திய நீர்த்துறையையுடைய திருவானைக்காவில் கோயில் கொண்டுள்ள சிவபெருமானைத் துதித்துப் பன்னவல்ல நான்கு மறைகளையும் பாடுதலில் வல்ல தன்மையுடையவர்கள் அப்பெருமானின் நெருங்கிய வீரக்கழல்களுடன் கூடிய திருவடிகளைத் தியானிக்க வல்லவர்கள் ஆகி (அதனால்) முத்திப் பேற்றையும் அடையவல்லவர்களாவர்.

பன்னுதல்—திரும்பத்திரும்பச் சொல்லுதல்; முன்னுதல்-கருதுதல், தியானித்தல்; மொய்கழல்-கழல்களையணிந்த திருவடிகளைக் குறித்தது, துன்னுதல்—நெருங்குதல், அடைதல். விண்—இங்கு வீடு பேறு குறித்தது.

ஊனொடுண்டல் நன்றென வூனொடுண்டல் தீதென
ஆனதொண்டர் அன்பினால் பேசநின்ற தன்மையான்
வானொடொன்று சூடினான் வாய்மையாக மன்னிநின்(று
ஆனொடஞ்சும் ஆடினான் ஆனைக்காவு சேர்மினே. 9

9. ஊனோடு உணவு கொள்ளுதல் நல்லது எனவும் அது தீது எனவும் உரிய தொண்டர்கள் அன்பு மிகுதியால் பேசுவதற்கு ஏற்றவாறு அவர்களுடைய அன்பில் ஈடுபட்டு நின்ற இயல்பினனும்; (உயிர்களுக்கு அருள்பாலிக்கும்) என்றும் அழியாத உண்மைப் பொருளாக நிலைத்து நின்று ஆகாய கங்கையையும் ஒற்றைக்கலை சந்திரனையும் திருமுடி மேல் அணிந்தவனும், பசுக்களிடமிருந்து பெறப்படும் ஐந்து பொருள்களையும் தனக்கு இனிய அபிடேகமாகக் கொண்டவனுமான சிவபிரான் எழுந்தருளியுள்ள திருவானைக்காவைச் சென்று அடையுங்கள்.

ஊனொடு உண்டல் நன்று என்று பெருமானுக்கு ஊன் நிவேதனம் செய்தவர் கண்ணப்ப நாயனார். அது தீது என்று அஞ்சி பவித்திரம் செய்தும் இறைவரிடம் அதைத் தவிர்க்கும் படி முறையிட்டும் செய்தவர் சிவகோசரியார். தொண்டர்களான இவ்விருவர்களுடைய கூற்றும் இறைவன் பால் கொண்ட பேரன்பின் காரணமாகவே எழுந்தனவாகலின், அப்பெருமான் இருவரும் செய்த வழிபாட்டை ஏற்றுக் கொண்டனர். இறைவழிபாட்டுக்கு அன்பே முதன்மையானது என்பது இதனால் புலப்படுகிறது.

வானொடு ஒன்று —வான்-ஆகாயகங்கை; ஒன்று-ஒற்றைக் கலைப்பிறை. கங்கையையும் பிறையையும் சூடினார் என்று பொருள் உரைக்கப்பட்டது இவ்வாறின்றி, கங்கையைக் கொள்ளாது வானொடு ஒன்று என்று சேர்த்து ஆகாயத்தோடு பொருந்துதலையுடைய பிறைச்சந்திரன் என்றும் கொள்ளலாம்.

ஆனொடு அஞ்சு—'பஞ்சகவ்யம்' எனப்படும் ஐந்து பொருள்கள். இவை பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்பனவாம். இவை ஐந்தில் முதல் மூன்று பொருட்கள் மட்டுமே அபிடேகத்தில் பயன்படுத்தப்படும் என்றும் மற்ற இரண்டும் உபசாரமாகச் சேர்க்கப் பட்டுள்ளன என்றும் கூறுவாரும் உளர். கோமயம், கோசலம் இவையிரண்டும் ஒரு குறிப்பிட்ட விகிதத்தில் சேர்க்கப் படுதலும் உண்டு என்றும் கூறுவர் சிலர்.

கையிலுண்ணுங் கையருங் கடுக்கடின் கழுக்களும்
மெய்யைப் போர்க்கும் பொய்யரும் வேதநெறியை
யறிகிலார்
தையல்பாக மாயினன் தழலதுருவத் தானெங்கள்
ஐயன்மேய பொய்கைசூழ் ஆனைக்காவு சேர்மினே. 10

*10.* கையிலே கவளம் கவளமாக இடப்பட்டு உணவு கொள்ளும் கீழ்மக்களும் கடுக்காய்ப் பொடியைத் தின்னு பவர்களுமான சமணர்களும், தங்களுடைய உடல் முழு வதையும் போர்வையால் போர்த்திக் கொள்ளும் பௌத்தர் களும், இறைவனுடைய திருவாக்காகிய வேதங்கள் கூறும் நன்னெறியை அறிய மாட்டார்கள். (எனவே அவர்களைப் புறக்கணித்து) உமாதேவியாரை ஒருபக்கத்தில் உடைய வனும் அழல் வடிவினனுமான எங்கள் தலைவன் சிவபிரான் கோயில் கொண்டுள்ளதும் பொய்கைகள் சூழ்ந்ததுமான திருவானைக்காவைச் சென்று அடையுங்கள் (அடைந்து பெருமானை வழிபட்டு உய்திபெறுங்கள் என்பது சுவாமி களின் உபதேசம்).

கடுக்கள் தின்னுதல்—இது பற்றி முன் தமிழ் மாலை—24ல், பக்கம்-45ல் உரைத்தவை காண்க. கழுக்கள்—கழுதுகள் (பேய்கள்). மெய்யைப் போர்க்கும் பொய்யர்—உடல் முழுவதையும் போர்வையினுல் மூடிக்கொள்ளும் பொய்யர்கள் என்றும், மெய்யைப் (உண்மையை)

பொய்யினுல் மூடி மறைப்பவர்கள் என்றும் இருவகை யாகப் பொருள் படுதல் காண்க.

ஊழியூழி வையகத் துயிர்கள்தோற்று வானெடும்
ஆழியானுங் காண்கிலா ஆனைக்காவில் அண்ணலைக்
காழிஞான சம்பந்தன் கருதிச்சொன்ன பத்திவை
வாழியாகக் கற்பவர் வல்வினைகள் மாயுமே. 11

திருச்சிற்றம்பலம்

*11.* ஒவ்வொரு ஊழிக்குப் பின்னரும் உலகத்து உயிர் களைத் (உரிய உடல்களைப் படைத்து இறைவரது ஆணையி ஞல்) தோற்றுவிப்பவனுகிய பிரம்மதேவனும், திருமாலும் காண்பதற்கரியவனுன திருவானைக்காவில் கோயில்கொண் டுள்ள தலைவனுகிய சிவபிரானைச் சீகாழித் திருஞான சம்பந்தன் தியானித்துச் சொன்ன பத்துத் திருப்பாடல் களாகிய இவற்றை இறைவனை வாழ்த்தும் திருமறையாகக் கொண்டு கற்பவர்களுடைய வலிய பாவங்கள் அனைத்தும் மாயும் என்றவாறு.

வாழி—வாழ்வுதருவது. இகரம் கருவிப் பொருளில் வந்தது. (திருத்தருமைக் குறிப்புரை).

வாழியாக—கற்பவர் வாழி; அவர்களுக்கு ஆக்க முண்டாகுக. (கோவை திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் உதவிய உரைக் குறிப்பு).

இத்திருப்பதிகத்தில் எட்டாவது திருப்பாடலில் இராவணன் செயலைக் குறிப்பிடாமலும், ஒன்பதாம் திருப் பாடலில் வரவேண்டிய அரி அயன் பற்றிய செய்தி திருக் கடைக்காப்பில் கூறப்பெற்றும் அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கது.

தலவரலாறு—திருவானைக்கா என்னுமித்தலம் காவிரி வடகரையில் 60வது திருத்தலமாகும். திருவானைக்காவல் என்று வழங்கப்படுகிறது. யானை ஒன்று பூசித்துப்பேறு

பெற்ற இடமாதலின் இப்பெயர் பெற்றது. வடமொழியில் இத்தலத்தை கஜாரண்ய க்ஷேத்திரம் எனக்கூறுவர். ஒரு வெண்ணுவல் மரத்தின்கீழ் இறைவர் வெளிப்பட்டு எழுந் தருளியிருந்ததால் வெண்ணுவல் என்றும் வடமொழியில் ஜம்புகேசுவரம் என்றும் பெயர் பெற்றது. பஞ்சபூதத்தலங் களுள் இது அப்புத்தலமாகும். (அப்பு-நீர்) இறைவரைத் திருத்தாண்டகத்தில் அப்பரடிகள் செழுநீர்த்திரள் என்று பாடியுள்ளார்கள். சிவலிங்கத்தின் அடியிலிருந்து நீர் பெருகி வருவது இன்றும் காணலாம்.

இத்தலத்தில் ஒரு வெள்ளை யானையும் சிலந்தியும் வெண்ணுவல் மரத்தடியில் எழுந்தருளியிருந்த சிவலிங்க மூர்த்தியைப் பூசித்ததும், இவ்விரண்டுக்கும் மாறுபாடு உண்டாகவே சிலந்தி யானையின் துதிக்கையினுள் புகுந்து கடித்ததும், யானை வலிதாங்காது துதிக்கையை நிலத்தில் மோதியறைய இரண்டும் இறந்ததும், இறைவர் யானைக்கு அப்போதே வீடு பேறளித்துச் சிலந்தியைச் சோழவம்சத்தில் பிறந்து உலகாள அருள்புரிந்ததுமாகிய செய்திகளைப் பெரிய புராணம் கோச்செங்கட் சோழநாயனர் புராணத்தில் விளக்கமாகக் காணலாம்.

இந்தச் சிலந்திதான் முற்பிறப்பின் நினைவோடு பிறந்து சோழமன்னனாகி யானை உட்புகாத 78 கோயில்கள் இறைவனுக்கு அமைத்துச் சிவபக்தியில் சிறந்த கோச் செங்கட்சோழ நாயனராவர். இவரைத் திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவானைக்காத் திருப்பதிகத்தில் குறிப்பிட்ட தன்றி திருமூக்கீச்சரத்துத் திருப்பதிகத்திலும் சிறப்பித்துப் பாடியுள்ளார். (மூவர்தமிழ் மாலை-24, பக்கம் 48 முதல் 57, காண்க).

உறையூர்ச் சோழமன்னன் ஒருவன் காவிரியில் நீராடும் போது அவன் தரித்திருந்த மணியாரம் நழுவி ஆற்றில் விழுந்து விட்டது. உடனே அம்மன்னன், ‘‘நின்மலனான சிவபெருமானே! நீரே அந்த மாலையைக் கொண்டருளும்’’

(சிவார்ப்பணம்) எனப்பிரார்த்தித்தான். அந்த மணியாரம் திருவானைக்காவில் திருமஞ்சனக்குடத்தில்புக, அம்மன்னனது பிரார்த்தனைப்படி இறைவர் தமக்குச் செய்யப்பட்ட அபிடேக நீரோடு அந்த ஆரத்தையும் ஏற்றருளினர். இச் செய்தியையே பிள்ளையார், 'ஆர நீரோடேந்தினன் ஆனைக்காவு சேர்மினே' எனப்பாடியருளினர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் இவ்வரலாற்றைத் தமது திருவானைக்காத் திருப்பதிகத்தில்,

தாரமாகிய பொன்னித் தண்டுறை ஆடி விழுத்து
நீரில் நின்றடி போற்றி நின்மலா கொள்ளென ஆங்கே
ஆரங் கொண்டஎம் ஆனைக் காவுடை ஆதியை நாளும்
ஈரம் உள்ளவர் நாளும் எம்மையும் ஆளுடை யாரே.

(திருவானைக்காத் திருப்பதிகம்-7)

எனப் பாடியுள்ளார். இதே வரலாற்றைச் சேக்கிழார் பெருமான்,

வளவர் பெருமான் மணியாரஞ் சாத்திக்
கொண்டு வரும் பொன்னிக்
கிளருந் திரைநீர் மூழ்குதலும் வழுவிப்
போகக் கேதமுற
அளவில் திருமஞ் சனக்குடத்தில் அதுபுக்கு
ஆட்ட அணிந்தருளித்
தளரும் அவனுக் கருள்புரிந்த தன்மை
சிறக்கச் சாற்றினர்.

—ஏயர்கோன் கலிக்காமர் புராணம்—76.

என்று விளக்கமாக அருளிச்செய்துள்ளார்.

திருக்கோயில் ஐந்து பிராகாரங்கள் கொண்ட பெரிய கோயில். இறைவர் சந்நிதி மேற்குப்பார்த்தும், இறைவியார் சந்நிதி கிழக்குப் பார்த்தும் உள்ளன. திருக்கயிலையினின்றும் எழுந்தருளி அம்பிகை இங்குத் தவம் செய்து ஞானேபதேசம் பெற்றதால் இது ஞானத்தலம் எனவும்

வழங்கப்படும். இறைவியார் தண்ணீரையே திரட்டிச் சிவலிங்கமாக அமைத்துப் பூசித்தார் என்றும் கூறப்படுகிறது. இறைவர் அம்பிகைக்கு உபதேசித்தருளியபோது நந்திதேவரும் சம்பு முனிவரும் உடனிருந்து கேட்டனர். இறைவரை அம்பிகை பூசித்ததை விளக்கும்பொருட்டு அம்பிகை சந்நிதி அருச்சகர் தினமும் அம்பாள் போல் வேடம் பூண்டு வந்து நண்பகலில் பெருமானைப் பூசிக்கும் ஐதிகம் நடைபெற்று வருகிறது. சம்பு முனிவர், திருமால், பிரமதேவர் முதலியோர் பூசித்துப்பேறு பெற்றனர் என்றும் கூறப்படுகிறது.

திருநீறிட்டான் திருமதில் எனப்படும் வெளிப்புறத்துத் திருமதில் இறைவர் சித்தமூர்த்திகளாய் எழுந்தருளி வந்து திருநீற்றையே கூலியாகக் கொடுத்து எடுப்பித்த காரணம் பற்றி அப்பெயர் பெற்றது.

தலமரமாகிய வெண்ணாவல் ஞானத்தின் அடையாளம் எனப்படுகிறது. 'ஞானச்சார்வாம் வெண்ணாவலுடனே' என்ற சேக்கிழார் பெருமான் திருவாக்கு இதனை உறுதிப்படுத்துகிறது. (கோச்செங்கட் சோழநாயனர் புராணம் - 13ம் பாடல் காண்க).

திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பதிகங்சள் மூன்று, அப்பரடிகள் பதிகங்கள் மூன்று, சுந்தரமூர்த்திகள் தேவாரம் ஒன்று ஆக ஏழு பதிகங்களையுடையதாய் மூவராலும் பாடப்பட்ட சிறப்பினையுடையது இத்தலம். திருவாவடுதுறை ஆதீனத்துச் சிவஞான முனிவரரின் மாணுக்கர் கவிராக்ஷஸ கச்சியப்ப முனிவர் பாடிய தலபுராணமும், மஹாவித்துவான் திரிசிரபுரம் மீனாட்சிசுந்தரம் பிள்ளையவர்கள் பாடிய அகிலாண்ட நாயகி மாலையும் அச்சிடப்பட்டுள்ளன.

திருச்சி கோட்டை இரயில் நிலயத்திலிருந்து வடக்கே சுமார் 5½ கிலோமீட்டர் தொலைவிலும், ஸ்ரீரங்கம் நிலயத்

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவ ஜயம்

# கூடற்சதுக்கம்

## திருக்கயிலாயமும் - திருவானைக்காவும் - திருமயேந்திரமும் - திருவாரூரும்

(திருவானைக்காவில் பாடியருளியது)

பதிகவரலாறு:—திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவானைக்காவில் எழுந்தருளியிருந்த நாட்களில் திருக்கயிலை, திருவானைக்கா, திருமயேந்திரம், திருவாரூர் ஆகிய நான்கு தலங்களிலும் மேவிய வேதப்பொருளாயினாரை நாரணன் நான்முகன் காணா உண்மையைப் புகழ்ந்து பாடி எல்லையில் இன்பமுற்றது இத்திருப்பதிகம். இத்திருப்பதிகத்து ஒவ்வொரு திருப்பாடலிலும் இவ்வுண்மை சிறப்பித்துக் கூறப் பட்டுள்ளது.

---

(21ம் பக்கத் தொடர்ச்சி)

திலிருந்து சுமார் 1 கிலோமீட்டர் தொலைவிலும் இத்தலம் உள்ளது.

இறைவர்திருப்பெயர்-நீர்த்திரள்நாதர், ஜம்புகேச்வரர்; இறைவியார் திருப்பெயர்—அகிலாண்டநாயகி; தீர்த்தம்—இந்திர தீர்த்தம், சந்திர தீர்த்தம், காவிரி முதலியன; தலவிருட்சம் - வெண்ணாவல் மரம்.

சிவம்.

நாரணன் நான்முகன் காணுவுண்ணமை
வெண்ணுவ லுண்மை மயேந்திரமுஞ்
சீரணி நீடுந் திருக்கயிலை
செல்வத் திருவாரூர் மேய பண்பும்
ஆரணத் துட்பொரு ளாயினுரை
யானைக் காவின்கட் புகழ்ந்துபாடி
காரணி யும்பொழில் சூழ்ந்தசண்பை
ஏந்தலார் எல்லையில் இன்பமுற்ருர்:
—பெரியபுராணம், திருஞானசம்பந்தர் புராணம்: 346.

திருஆனைக்காவின்கண் இப்பதிகம் கூடற்சதுக்கம் எனப் பெயர்பெற்று பாடல்தோறும் இந்நான்கு திருத்தலங்களிலும் இறைவர் வெளிப்பட அருளுந்திறம் போற்றப்பட்டது.

கூடற்சதுக்கம் பெயர் விளக்கம்—நான்கு தெருக்கள் ஒன்ருகக் கூடுமிடத்தைச் சதுக்கம் என வழங்குதல் மரபு. அம்முறையில் திருமயேந்திரம், திருக்கயிலாயம், திருவாரூர், திருவானைக்கா என்ற நான்கு தலங்களும் ஒன்று கூடிய நிலையில் அந்நான்கு தலங்களிலும் கோயில்கொண்டருளிய பெருமானைப் பரவிப் போற்றுவதாக அமைந்தது,

மண்ணது வுண்டரி மலரோன்காணு
வெண்ணுவல் விரும்பு மயேந்திரருங்
கண்ணது வோங்கிய கயிலையாரும்
அண்ணலா ரூராதி யானைக்காவே

என்ற பாடலை முதலாகவுடைய இத்திருப்பதிகமாகும். இப்பதிகப் பாடல்கள் யாவும் திருக்கயிலாயம், திருவானைக்கா, திருமயேந்திரம், திருவாரூர் ஆகிய நான்கு தலங்களையும் தனித்தனியே குறித்துப்போற்று முகத்தால் அவை நான்கும் ஒருங்கே கூடிய சதுக்கம் போன்று அமைந்திருத்தலால் இப்பதிகம் கூடற்சதுக்கம் என்னும் பெயர்த்தாயிற்று. [வித்துவான் க. வெள்ளைவாரணனாரின் பன்னிரு திருமுறை வரலாறு, முதற் பகுதி, பக்கம் 653-654].

கூடற்சதுக்கம்-சிவக்கவிமணியவர்களின் பெரியபுராணப் பேருரையில் கண்ட பதிகக்குறிப்பு. பின் வருமாறு:

'திதிக்கடவுளும் படைப்புக் கடவுளும் தோன்றுதற்குக் காரணமாகிய அச்சங்காரக்கடவுளே உலகிற்கு முதற் கடவுள் என்ற சிவஞானபோத முதற் சூத்திரக் கருத்துக் குறிப்புமாம். காணு உண்மை என்றது காண்க. திருக் கயிலை நொடித்தான் மலையாதலின் சங்காரத்தையும், திருவாரூர் புற்றிடங் கொண்டாராதலின் பிருதிவி நிலயமாய்ப் படைப்பினையும், திருவானைக்காவுடையார் செழுநீர்த்திரளாய் நீரினை இடங்கொண்டாராதலின் திதியினையும், உண்மை மயேந்திரத்தில் ஆரணத்துட்பொருளாயினாராதலின் அவ்வியல்புகளெல்லாம் தெரிக்கும் நிலையினையும் குறிப்பால் உணர்த்துதலின் இந்நான்கு தலங்களையும் சேர்த்துக் கூடற்சதுக்கமாக இத்திருப்பதிகம் அருளப்பட்டதென்பதும் கருதவுள்ளது'' (கூடற்சதுக்கம் - ஒருவகைச் சித்திரக்கவி.

**பண்—பழம்பஞ்சுரம்] திருச்சிற்றம்பலம் [3-ம்திருமுறை**

**மண்ணது வுண்டரி மலரோன்காணு**
**வெண்ணுவல் விரும்புமயேந்திரரும்**
**கண்ணது வோங்கிய கயிலையாரும்**
**அண்ணலா ரூராதி யானைக்காவே. 1**

**பதிகப்பொழிப்புரை:** — *1.* (கிருஷ்ணுவதாரத்தில்) மண்ணையுண்ட திருமாலும், நான்முகனுங் காணுத மயேந்திர மலையில் வீற்றிருப்பவரும், இடமகன்றதும் ஓங்கியுயர்ந்ததுமான திருக்கயிலாயமலையில் உறைபவரும்; பெருமை பொருந்திய திருவாரூரின் தலைவரும், வெண்ணுவல் விரும்பும் திருவானைக்காவில் எழுந்தருளிய ஆதி முதல்வராகிய சிவபெருமானேயாவர்.

**கண்**—இடம், பெருமை. **கண்ணது ஓங்கிய கயிலை**—காட்சி மிக்க திருக்கயிலை என்பது திருத்தருமையாதீனக்

குறிப்புரை: கண்—கருவியாகு பெயர் எனக் கொண்டார் இக்குறிப்புரையாசிரியர்.

**ஆதியானைக்காவே:**—ஆனைக்கா ஆதியே எனமாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது. இத்திருப்பதிகத்து மற்ற பாடல்களிலும் இவ்வாறே கொள்க.

**வந்துமால் அயனவர் காண்பரியார்**
**வெந்தவெண் ணீறணி மயேந்திரரும்**
**கந்தவார் சடையுடைக் கயிலையாரும்**
**அந்தணு ரூராதி யானைக்காவே.** 2

2. (பேரழல் வடிவாய்) வந்து திருமாலும் நான்முகனும் காண்பதற்கு அரியவரும், நன்கு சுடப்பட்ட வெண்ணீற்றினை அணிகின்ற மயேந்திர மலையில் உறைபவரும், மணம் மிக்க நீண்ட சடையையுடைய திருக்கயிலாயநாதனும், அழகியதும் குளிர்ச்சி பொருந்தியதுமான திருவாரூர்ப் பெருமானும் திருவானைக்காவில் எழுந்தருளிய ஆதிமுதல்வராகிய சிவபெருமானேயாவர்.

**மாலயன் தேடிய மயேந்திரரும்**
**காலனை உயிர்கொண்ட கயிலையாரும்**
**வேலைய தோங்கும்வெண் ணுவலாரும்**
**ஆலையா ரூராதி யானைக்காவே.** 3

3. திருமாலும் நான்முகனும் (அடிமுடி) தேடிய மகேந்திரமலையில் உள்ளவரும், இயமனை உதைத்து அவனுயிரைக் கொண்ட திருக்கயிலைப் பெருமானும், பிரளய காலத்தும் அழியாது நிலைக்கும் வெண்ணாவல் மரத்தடியில் எழுந்தருளியிருப்பவரும், கரும்புப் பயிர் மிகுதியாக விளையும் திருவாரூரரும், திருவானைக்காவில் கோயில்கொண்ட ஆதியாராகிய சிவபெருமானேயாவார்.

**வேலையது ஓங்கும் வெண்ணுவல்** என்பதற்கு “கடல் போல் நீர் பொங்கப் பெற்ற வெண்ணுவல் - பஞ்ச பூதத்

தலங்களில் அப்புத்தலமாதலாலும் அப்பர் அடிகள் 'செழுநீர் திரளைச் சென்றாடினேனே' எனக் கூறியவாறு இறைவனே நீர்வடிவாய் இருத்தலாலும், வேலையது ஓங்கும் எனக்கூறப் பட்டது'' எனப்பொருள் உரைத்தார் திருத்தருமை ஆதீனக் குறிப்புரையாசிரியர்.

கருடனை யேறரி அயனோர்காணார்
வெருள்விடை யேறிய மயேந்திரரும்
கருடரு கண்டத்தெங் கயிலையாரும்
அருளனா ரூராதி யானைக்காவே. 4

4. கருடனை (ஊர்தியாக) ஏறும் திருமால் (மற்றும்) நான்முகன் முதலியோரால் காணப்படாதவரும், அச்சத்தைத் தரும் இடப வாகனத்தில் ஏறிய மயேந்திரரும் கருமை நிறம் பொருந்திய கழுத்தையுடைய திருக்கயிலைப் பெருமானும், திருவாரூரில் கோயில்கொண்ட அருளே வடிவமானவரும், திருவானைக்காவில் எழுந்தருளிய ஆதி முதல்வராகிய சிவபெருமானேயாவார்.

வெருள் விடை:—பகைவர் அஞ்சத்தக்க விடை (திருத் தருமையாதீன உரைக் குறிப்பு). கருடனை முற்கூறிய சந்தர்ப்பம் நோக்கி அக்கருடனை அலைத்ததால் விடை வெருள் விடையாயிற்று (புலவர் திரு. பி. மா. சோம சுந்தரனார் தரும் விளக்கம்). அதருமத்தால் அஞ்சப்படு கின்ற தருமவிடை (கோவை அறிஞர் திரு. சி. சு. கண் ணாயிரம் அவர்கள் உதவிய விளக்கம்).

மதுசூதனன் நான்முகன் வணங்கரியார்
மதியது சொல்லிய மயேந்திரரும்
கதிர்முலை புல்கிய கயிலையாரும்
அதியனா ரூராதி யானைக்காவே. 5

5. மதுசூதனன் என்ற ஒரு பெயரையுடைய திருமாலும் நான்முகனும் (அடிமுடிகண்டு) வணங்குதற்கரியவரும்

தக்ஷிணாமூர்த்தியாகி ஞானோபதேசம் செய்த மயேந்திரரும், உமாதேவியார் தழுவிய திருக்கயிலைப் பெருமானும், திருவாரூரில் எழுந்தருளிய யாவர்க்கும் மேம்பட்டவரும், திருவானைக்காவில் கோயில்கொண்டருளிய சிவபிரானே யாவர்.

மதுசூதனன்—மது என்ற அசுரனைக் கொன்றதனால் திருமாலுக்கு மதுசூதனன் என்ற ஒரு பெயர் வழங்கலாயிற்று. மதி—அறிவு, ஞானம்; தக்ஷிணாமூர்த்தித் திருக்கோலங் கொண்டு ஞானம் உபதேசித்த வரலாறுகொண்டு எம்மால் அப்பொருள் உரைக்கப்பட்டது. இவ்வாறின்றி மதியது சொல்லிய மயேந்திரரும் என்பதற்கு "ஆகமங்களை உபதேசித்தருளிய மகேந்திரமலையில் எழுந்தருளியிருப்பவரும். அது மன்னுமாமலை மகேந்திரமதனில் சொன்ன ஆகமம் தோற்றுவித்தருளியும் என்னும் திருவாசகம் திருவகவலால் அறிக," என்று பொருள் உரைத்தார் திருத் தருமையாதீனக் குறிப்புரை ஆசிரியர்.

மதி—இச்சொல்லுக்கு நேரே ஆகமம் என்ற பொருளில்லை. ஞானம் என்று கொண்டு பதிஞானத்தை அருளிய என்றும் உரை கூறலாம். (இது கோவை அறிஞர் சி. சு. கண்ணையிரம் அவர்கள் கருத்து).

மதி—அறிவு; அஃதாவது தட்சிணாமூர்த்தியாயிருந்து ஞானநிலை உரைத்த தன்மை. (இராணிப்பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனார் அவர்கள் உரைக் குறிப்பு).

கதிர்முலை-ஒளிபொருந்திய தனபாரங்கள் எனப்பொருள் பட்டு அவற்றையுடைய உமாதேவியாருக்காகியது. (ஆகு பெயர்).

அதியன்—அனைவருக்கும் மேம்பட்டவன். "ஆவடு துறையுள் அதியனே - நம்பிகள் தேவாரம் தக்கேசி-திருவாவடுதுறை திருப்பதிகம் 4-ம் பாடல், சுவாமிநாத பண்டிதர்

பதிப்பு - தலமுறை - 1911. பின் வந்த பிறபதிப்புகளில் அதிகனே என்றும் அதிபனே என்றும் காணப்படுகிறது. (கோவை திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் உதவிய விளக்கம்).

சக்கரம் வேண்டுமால் பிரமன்காணு
மிக்கவர் கயிலை மயேந்திரரும்
தக்கனைத் தலையரி தழலுருவர்
அக்கணி யவராரூர் ஆனைக்காவே. 6

6. சக்கராயுதத்தை வேண்டிப் பெற்ற திருமாலும், பிரமதேவனும் காணாத கயிலாயமலையில் வாசஞ் செய்யும் மிக்கவரும், மயேந்திரமலையில் எழுந்தருளியவரும், தக்கனைத் (அவன் வேள்வியையழித்து) தலையரிந்து (வேள்வித் தீயிலிட்ட) தழலுருவரும், திருவாரூர் மேவிய அக்குமாலையை அணியாகக் கொண்டவரும், திருவானைக் காவில் கோயில் கொண்டருளிய சிவபெருமானேயாவர்.

காணுமிக்கவர் கயிலை—காணுக் கயிலை மிக்கவர் என்று மாற்றிப் பொருள் உரைக்கப்பட்டது. மிக்கவர் - உயர்ந்தவர் (தழலாய் ஓங்கி உயர்ந்தவர்).

அக்கணி-உருத்திராக்க மாலையை அணியாகக் கொண்ட அல்லது எலும்பு மாலையணிந்த.

கண்ணனும் நான்முகன் காண்பரியார்
வெண்ணுவல் விரும்பு மயேந்திரரும்
கண்ணப்பர்க் கருள்செய்த கயிலையெங்கள்
அண்ணலா ரூராதி யானைக்காவே. 7

7. திருமாலும் நான்முகனும் காண்பதற்கரியவரும், வெண்ணுவலின்கீழ் எழுந்தருளியிருக்க விரும்பும் மயேந்திரரும், கண்ணப்பநாயனுருக்கு அருள் செய்த எங்கள் கயிலையாரும், திருவாரூர் அண்ணலாரும், திருவானைக்காவில் கோயில்கொண்டுள்ள ஆதிமுதல்வராகிய சிவபிரானேயாவர்.

கண்ணன்—திருமாலுக்குக் கிருஷ்ணவதாரத்தில் வழங்கிய ஒரு பெயர், இங்குத் திருமால் என்ற பொருளில் வந்தது.

**கடல்வண்ணன் நான்முகன் காண்பரியார்**
**தடவரை யரக்கனைத் தலைநெரித்தார்**
**விடமது வுண்டவெம் மயேந்திரரும்**
**அடல்விடையா ரூராதி யானைக்காவே.** 8

8. கடல்போலும் கரிய நிறத்தையுடைய திருமாலும் மற்றும் நான்முகனும் காண்பதற்கரியவரும், பெரிய திருக்கயிலாயமலையின்கீழ் இராவணனது தலையை நெரித்தவரும், விடத்தையுண்ட எமது மயேந்திரரும், திருவாரூரில் அடல் விடையாரும், திருவானைக்காவில் கோயில் கொண்டுள்ள ஆதி முதல்வராகிய சிவபெருமானேயாவர்.

அடல் விடையார்—வலிமையுள்ள இடபத்தை (எருதை) வாகனமாகவும், கொடியாகவும் உடையவர்.

**ஆதிமா லயனவர் காண்பரியார்**
**வேதங்கள் துதிசெயும் மயேந்திரரும்**
**காதிலோர் குழையுடைக் கயிலையாரும்**
**ஆதியா ரூரெந்தை யானைக்காவே.** 9

9. ஆதி நாளில் திருமாலாலும் நான்முகனாலும் காண்பதற்கரியவரும், திருமயேந்திரத்தில் எழுந்தருளிய வேதங்கள் துதி செய்யும் பெருமானும், ஒரு காதில் குழையையுடைய திருக்கயிலைநாதனும், திருவாரூரில் எழுந்தருளியுள்ள ஆதிப் பிரானும், திருவானைக்காவில் கோயில் கொண்டுள்ள எந்தையாராகிய சிவபெருமானேயாவர்.

முதலடியில் உள்ள ஆதி என்பது மாலயன் அடிமுடி காணாக் காலத்தின் தொன்மை குறித்தது. ஈற்றடியில் உள்ள ஆதி என்பது அனைத்து உலகங்களும், திருமால் பிரமன் உள்ளிட்ட அனைத்து உயிர்களும் இறைவரிடமிருந்தே

தோன்றுவதால் அவை தோன்றுவதற்கு ஆதியான முதல்வர் என்ற பொருளில் வந்தது. ஆதி என்பதைத் திருவாரூருக்கும் இயைத்துப் பொருள் கொள்ளலாம். திருவாரூர் எப்போது தோன்றியதென்று தெரியாது. திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரங் காண்க. ('ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ' எனத்தொடங்கும் திருத்தாண்டகம்). எனவே சிவபெருமானுக்கு இயைப்பின் மூலம் எனவும், திருவாரூருக்கு இயைப்பின் தொன்மை எனவும் கொள்க. (இராணிப் பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனார் உதவிய உரைக் குறிப்பு).

ஒரு காதில் குழையுடையவர் என்றது மற்ற காதில் தோடுடையவராய் மாதியலும்பாதியனாம் திருக்கோலத்தைக் குறிப்பிட்டதாகும்.

அறிவில் அமண்புத்தர் அறிவுகொள்ளேல்
வெறியமான் கரத்தாரூர் மயேந்திரரும்
மறிகட லோனயன் தேடத்தானும்
அறிவரு கயிலையோன் ஆனைக்காவே. 10

*10.* அறிவில்லாத சமணர்களையும் பௌத்தர்களையும் அறிவுள்ளவர்களாகக் கொள்ளாதீர்கள் (அல்லது அவர்களுடைய சொற்களை அறிவுடையனவாகக் கொள்ளாதீர்கள்). மருண்ட பார்வையுடைய மானைத் திருக்கரத்திலே உடைய திருவாரூர்ப்பெருமானும், மகேந்திரமலையாரும், பாற்கடலில் துயிலும் திருமால், மற்றும் நான்முகன் ஆகியவர்கள் (முறையே திருவடியையும் திருமுடியையும்) தேட அவர்களுக்கு அறிவதற்கரியவனாகிய திருக்கயிலைமலையாருமாகிய சிவபெருமான் கோயில் கொண்டுள்ள இடம் திருவானைக்காவேயாகும். (அங்குச் சென்று இறைவனை வழிபட்டு நலம் பெறுங்கள் என்பது உலகர்க்குச் சுவாமிகள் அருளும் உபதேசம் எனக் கொள்க).

ஏனமா லயனவர் காண்பரியார்
கானமார் கயிலைநன் மயேந்திரரும்
ஆனவா ரூராதி யானைக்காவை
ஞானசம் பந்தன் தமிழ்சொல்லுமே. 11

திருச்சிற்றம்பலம்

11. பன்றியுருவுடன் திருமாலும் அன்னப்பறவை வடிவில் நான்முகனும் தேடியும் காண்பதற்கரியவரும், கானகம் நிறைந்த திருக்கயிலாயமலையில் உறைபவரும், நன்மைதரும் திருமகேந்திரமலையில் எழுந்தருளியிருப்பவரும் திருவாரூரில் கோயில் கொண்டுள்ளவருமான ஆதிமூர்த்தியான சிவபெருமானின் திருவானைக்காவைப் பாடிய திருஞானசம்பந்தனின் தமிழ்ப்பாடல்களைப் பாடுவீர்களாக. (பாடி உய்வீர்களாக).

தலவரலாறு:—இத்திருப்பதிகத்தில் குறிப்பிடப்பட்ட நான்கு தலங்களில் திருக்கயிலாயம், திருவாரூர் தலவரலாறுகள் அவ்வத்தலத் திருப்பதிக உரையின் பகுதியாக பின்னர் வெளியிடப்படும். திருவானைக்கா தலவரலாறு திருவானைக்கா—2 பதிக உரைப்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே எஞ்சிய மகேந்திரம் என்னும் தலம் பற்றிச் சில கூறுதும்.

திருமயேந்திரம் (அல்லது திருமகேந்திரம்) — இது திருஞானசம்பந்த சுவாமிகளின் தேவாரத் திருப்பாடல் பெற்ற காவிரி வடகரை 6வது தலமான திருமயேந்திரப் பள்ளி என்பது கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணாயிரம் அவர்கள் கருத்து. ஆயினும் திருத்தருமை உரைக் குறிப்பு, சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்களுடைய உரைக்குறிப்பு, இராணிப்பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனார் அவர்களது உரைக்குறிப்பு ஆகியவைகளில் மகேந்திரமலை என்றே குறிப்பிடப்பட்டதாலும், திரு. க. வெள்ளைவாரணனார் அவர்கள் தமது

பன்னிரு திருமுறை வரலாறு நூல் முதற்பகுதியில் வைப்புத் தலங்களுள் ஒன்ருக மகேந்திர மலையைக் குறிப்பிடுவதாலும் பெரும்பான்மை கருத்திற்கிணங்க யாமும் மகேந்திர மலை எனவே கொண்டு பொருளுரைத்துள்ளோம். சேக்கிழார் பெருமானே மீண்டும் தோன்றித் தமது பெரிய புராணத்துக்கு உரைவகுத்தாலென்னப் பேருரை இயற்றிய கோவை சிவக்கவிமணி திரு. சி. கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் மகேந்திர மலை பற்றிக் குறிப்பிட்டுள்ள சில கருத்துக்களைக் கீழே கொடுக்கின்றோம்.

உண்மை மயேந்திரம்—உண்மைப் பொருளாகிய ஆகமங்களை வெளிப்படுத்திய இடம் என்பது குறிப்பு. உண்மைப் பொருள் பதி பசு பாச இயல்பும் பயனும். ''நல்ல அடியார் மேல் ஊனத்திரளை நீக்குமதுவும் உண்மைப் பொருள் போலும்'' (தேவா); ''மன்னு மாமலை மகேந்திரமதனிற், சொன்னவாகமம் தோற்றுவித்தருளியும்'' ''மற்றவை தம்மை மகேந்திரத்திருந்து உற்றவைம் முகங்களாற் பணித்தருளியும்'' (திருவாசகம்) மயேந்திரம் இமயத்தின் ஒரு சிகரம் என்பாரும், தென்கடலிலிருந்து நீரினுள் மூழ்கிய மலை என்பாரும் இரண்டிடங்களிலும் ஆகமம் வெளிப்படுத்தியருளினர் என்பாரும் ஆகப் பலதிறத்தார் ஆராய்ச்சியாளர். மகேந்திரமலை கயிலையின் சார்பிலே உள்ளதொரு மலை என்பது திருவிசைப்பாவினுற் புலமாகின்றது. ''பன்றிப் பின் சென்ருெரு நாள் விசயற்கருள் செய்த வேந்தே என்னும்'' என்பதனுலும், விசயன் கயிலைச்சாரலில் தவஞ் செய்தமை பாரதத்துக் கேட்கப்படுதலாலும், ''மகேந்திரப் பொன்மலையின் மலைமகளுக்கருளும் குரு நீ'' எனக் கூறலானும், ''வெள்ளி மால்வரைக் கயிலையில் வீற்றிருந்தருளி... ஆகமத் திறனெலாந் தெளிய, உள்ளவாறு கேட்டருளினுள் உலகையாளுடையாள்'' என்பதனுலும் உணரப்படும்.

சிவம்.

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவ ஜயம்

# திருப்பாற்றுறை

பதிகவரலாறு—திருவானைக்காவில் சில நாள்கள் தங்கி, நீர்த்திரள் நாதரை வணங்கி மகிழ்ந்து, அங்கிருந்து அகன்று, திருத்தவத்துறை என்னும் தலத்தினை அடைந்து அங்கு தேவதேவரை இனிய தமிழ்மாலை கொண்டு துதித்து வைதிகநெறியின் பெருமணி போன்ற திருஞானசம்பந்தப் பெருமான், திருப்பாற்றுறை என்னும் தலத்தையடைந்து, அங்கு இடபாரூடராகிய சிவபிரானைத் துதித்துப் பாடிய செந்தமிழ்மாலை இத்திருப்பதிகம்.

பண்—பழந்தக்கராகம்] திருச்சிற்றம்பலம் [1-ம்திருமுறை

காரார் கொன்றை கலந்த முடியினர்
சீரார் சிந்தை செலச்செய்தார்
பாரார் நாளும் பரவிய பாற்றுறை
ஆரா ராதி முதல்வரே. 1

பதிகப்பொழிப்புரை:-1. கார்காலத்துக்குரிய கொன்றை மலர் மாலையைச் சூடிய திருமுடியை உடையவரும் சிறந்த என் சிந்தை தம்மிடமே செல்லும்படி செய்தவரும் உலகத்து மக்கள் அனைவரும் நாள்தோறும் பரவிய திருப்பாற்றுறையில் கோயில் கொண்ட ஆத்திப்பூமாலை சூடிய ஆதிமுதல்வராகிய சிவபெருமானுவர்.

காரார் கொன்றை—கொன்றை கார்காலத்து மலரும் தன்மையுடையது என்பதாம். சீரார்சிந்தை - சிந்தைக்குச் சிறப்பு இறைவனிடமே செல்லுதலாகும். செலச்செய்தார்-

உடல் பசத்தலைக் குறித்தது. நயவர்—நலம் உடையவர். நயமுடையவராயிருந்தும் என்னைப் பிரிவுத் துன்பத்தில் ஆழ்த்தினரே என்பது குறிக்க நயவர் என்றார்.

பாகம் பெண்ணுடையவர்—பெண்ணை ஒரு பாகத்தில் உடையவராய்ப் பெண்ணின் அருமை அறிந்தவராகியும் ஒரு பெண்ணைத் துன்பத்திலே ஆழ்த்தியது அடுக்குமோ என்பதைக் குறிப்பிட்டதாம். (அல்லது) இறைவரது பாகத்தில் உள்ள பெண் அவரது அருளேயாதலால், அருளோடு கூடியிருந்தும் ஒரு உயிரைத் துன்பத்தில் ஆழ்த்தியது தகுமோ என்று குறிப்பால் உணர்த்தியதாகவுங் கொள்ளலாம்.

போது பொன்திகழ் கொன்றை புனைமுடி
நாதர் வந்தென் நலங்கொண்டார்
பாதந் தொண்டர் பரவிய பாற்றுறை
வேதம் ஓதும் விகிர்தரே. 6

6. பொன்னிறமுள்ள கொன்றைமலர் மாலையணிந்த நாதர் வந்து என் அழகைக் கவர்ந்து கொண்டார். (அவர்) தமது திருவடிகளைத் தொண்டர்கள் தொழும் திருப்பாற்றுறையில் கோயில் கொண்டுள்ள வேதமோதும் விகிர்தராகிய சிவபிரானேயாவர்.

நலங்கொண்டார்—நலம் அழகு; முன் 3-ம் திருப்பாடல் உரையில் எழில்கொண்டார் என்றவிடத்துக் கூறிய அனைத்தையும் இங்கும் கொள்க. பின்னர் 8, 10வது திருப்பாடல்களில் வரும் எழில் கொண்டார், நலம் வௌவினர் என்பனவற்றுக்கும் இவ்வாறே கொள்க. விகிர்தர்—மாறுபாடான செயல்களையுடையவர்.

வாடல் வெண்டலை சூடினர் மால்விடை
கோடல் செய்த குறிப்பினர்
பாடல் வண்டினம் பண்செயும் பாற்றுறை
ஆடல் நாகம் அசைத்தாரே. 7

7. வண்டின் கூட்டங்கள் பண்ணோடு பொருந்திய பாடல்களை இசைக்கும் திருப்பாற்றுறையில் கோயில் கொண்டவரும், படமெடுத்து ஆடுகின்ற பாம்பை அணிந்தவருமான சிவபெருமான் வாடிய வெண்டலையைச் சென்னியிலணிந்தவராய்ப் பெரிய இடபத்தைக் கொள்ளுதலைச் செய்த குறிப்பினையுடையவரானார். (ஊர்தியாகிய இடபத்தைக் கொள்வது அதன்மீது ஏறிச்சென்று தலைவியை பிரிந்து செல்லும் திருவுள்ளத்தைக் குறித்தது என்பதாம்).

வாடல் வெண்டலை—இது தாருகாவனத்து இருடியர்கள் ஆபிசார வேள்வியினின்றும் உண்டாக்கி இறைவர் மீது ஏவியது. வாடல் வெண்டலை அணிந்து வந்தது தலைவியின் உள்ளத்தை வாடச் செய்யும் குறிப்பு போலும்.

மால்விடை கோடல் செய்த குறிப்பினர்—திருமாலாகிய விடை ஊர்தி கொண்ட குறிப்பினால் தம்மையடைந்த ஆன்மாக்களிடமிருந்து மயக்கத்தைச் செய்யும் மாயாமல பந்தம் விடை பெற்றுக் கொள்ளும் (நீங்கும்) குறிப்பை உணர்த்துபவர்.

வெவ்வ மேனிய ராய்வெள்ளை நீற்றினர்
எவ்வஞ் செய்தென் எழில்கொண்டார்
பவ்வம் நஞ்சடை'கண்டரெம் பாற்றுறை
மவ்வல் சூடிய மைந்தரே. 8

8. திருப்பாற்கடலில் தோன்றிய நஞ்சு அடைந்த திருக்கழுத்தையுடையவரும், திருப்பாற்றுறையில் உறையும் முல்லைமலர்மாலை சூடியவரும், வீரருமான எமது பெருமான் தீயின் வெப்பமுடைய திருமேனியுடையவராய், திருநீறு அணிந்தவராய் வந்து பிரிவுத்துன்பம் செய்து எனது அழகைக் கவர்ந்து கொண்டார். எவ்வம்-துன்பம்; மௌவல்-முல்லை; காட்டு மல்லிகையுமாம்.

ஏனம் அன்னமும் ஆனவ ருக்கெரி
ஆன வண்ணத்தெம் அண்ணலார்

தவராய் வந்து அவளது அழகு முழுமையையும் கவர்ந்து கொண்டார் என்பதாம். அழகைக் கவர்தலாவது, பிரிவுத் துன்பத்தால் உடல் வாடியும் நிறம் மாறியும் அழகு கெடுதலுமாம். இதற்குக் காரணம் தலைவனுகலின் அவன் கவர்ந்து கொண்டான் எனப்பட்டது. இங்குத் தலைவி என்பது ஆன்மாவைக் குறிப்பதாகலின், ஆன்மாவின் எழில் கொள்ளுதல் என்பது அதன் பசுபோதத்தைப் போக்குதலாம்.

எழில்—உடலின் அழகு. உடல் மாயாமலத்தின் காரியமாகிய மாயேயம். இதைக் கொள்ளுதல் சகலராகிய நம்மை மாயாமல பந்தத்தினின்றும் விலக்கிப் பிரளயாகலராக உயர்த்துதல். (கோவை அறிஞர் திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள் உதவிய சாத்திர உள்ளுறைப் பொருள்).

''தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச் சங்கரா யார் கொலோ சதுரர்'' (திருவாசகம், கோயில் திருப்பதிகம்—10) என்னுமாறு சீவகரணங்களைக் கொண்டு சிவகரணங்களைத் தந்ததையே எழில் கொண்டார் என்றுர். (இராணிப்பேட்டைப் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனுர் அவர்கள் உதவிய கருத்து).

பண்ணுர் வண்டினம் பாடல்செய் பாற்றுறை—பத்தர்கள் கூட்டம் இனிய இசையுடன் தோத்திரப் பாடல்களைப் பாடித்துதிக்கும் திருப்பாற்றுறை என்பது உள்ளுறை பொருள். 11-ம் திருப்பாடலில் பத்தர்கள் மன்னிய பாற்றுறை என அருளிச் செய்தது இக்கருத்தை வலியுறுத்தும்.

பூவுந் திங்கள் புனைந்த முடியினர்
ஏவின் அல்லார் எயிலெய்தார்
பாவந் தீர்புனல் மல்கிய பாற்றுறை
ஓவென் சிந்தை யொருவரே. 4

4. பூமாலையையும் பிறைச் சந்திரனையும் அணிந்த திருமுடியையுடையவரும், (ஒரு) அம்பினால் பகைவரது முப்புரத்தையும் எய்து எரித்தவரும், (மூழ்கியவரது) பாவங்களைத் தீர்க்கும் புண்ணிய தீர்த்தங்கள் நிறைந்த திருப்பாற்றுறையில் எழுந்தருளிய நாதருமாகிய சிவபெருமானே, ஓ! என் சிந்தையில் நிறைந்த ஒருவராவர். (தலைவியின் சிந்தையில் தலைவனைத் தவிர வேறு யாருக்கும் இடமில்லை என்பதாம்).

அல்லார்—பகைவர்; ஓ—அதிசய இரக்கம் குறித்தது. ஒருவர்—ஒப்பற்றவர் எனலுமாம்.

ஓவென் சிந்தை ஒருவர்—சிந்தை ஒருவர், ஓவென் ஒருவர். பிரணவ வடிவமாக என் சிந்தையில் நிற்கும் ஒப்பற்றவர். பிரணவம்—சமஷ்டி பஞ்சாட்சரம் (கோவை திரு. சி. சு. கண்ணுயிரம் அவர்கள்).

ஓவென் சிந்தை ஒருவரே—ஓவு என் சிந்தை ஒருவரே. பலவழியில் பறந்து திரிந்த என் சிந்தை அச்செயல் ஓவுதலுற்றுத் தன்மாட்டேயே நிலைத்திருப்ப அதன்கண் விளங்கும் ஒருவர். (புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனார் அவர்கள்).

மாகந் தோய்மதி சூடி மகிழ்ந்தென(து)
ஆகம் பொன்னிற மாக்கினார்
பாகம் பெண்ணும் உடையவர் பாற்றுறை
நாகம் பூண்ட நயவரே. 5

5. ஒரு பாகத்தில் உமாதேவியாரையுடையவரும், திருப்பாற்றுறையுள் எழுந்தருளியவரும் நாகம்பூண்ட நயவருமாகிய சிவபெருமான் வானில் தோயும் பிறைச்சந்திரனைச் சூடி, மகிழ்ந்து, எனது மேனியைப் பொன்னின் நிறமாக ஆக்கினார்.

ஆகம்—மார்பு, இங்கு உடலைக்குறித்தது. பொன்னிற மாக்குதல்—தலைவனின் பிரிவால் ஏற்பட்ட துன்பத்தால்

'அவனருளாலே அவன் தாள் வணங்கி' என்பது போல இறைவரது அருள் இருந்தாலன்றி நம் சிந்தை இறைவனிடம் செல்லாது. எனவே செல்லும்படி அருள் புரிந்தார் என்று கூறியருளினர். 'நினையுமா நினையே' என்ற திருவிசைப்பாப்பகுதி காண்க.

மூன்ருவது நான்காவது அடிகள் 1) பாரார் நாளும் பரவிய ஆதிமுதல்வர் 2) பாற்றுறை ஆதிமுதல்வர் 3) ஆரார் ஆதிமுதல்வர் என மூன்று வகையாக இயைத்துப் பொருள் கொள்ள நின்றன.

தலைவியின் சிந்தையைத் தன்பால் செலச்செய்து அவளது நலங்கவர்ந்த தலைவனது அடையாளங்களையும், நல்லியல்புகளையும் தன்னுயிர்த் தோழிக்குக் கூறும் தலைவி கூற்ருக இத்திருப்பதிகம் அமைந்துள்ளது. தலைவனைப்பற்றிய சிந்தனையைத் தவிர வேறு எச்சிந்தனையும் அவள் உள்ளத்தில் புகாத நிலையைக் குறிப்பிடுகிறது. ஆன்மாக்கள் உயிர்த் தலைவனுகிய சிவபிரானது நினைவாகவே இருந்து அவன் இயல்புகளையும் புகழையும் உணர்ந்து இன்பமடைய வேண்டுமெனக் குறிப்பால் உணர்த்துகிறது.

நல்லா ரும்மவர் தீய ரெனப்படும்
சொல்லார் நன்மலர் சூடினர்
பல்லார் வெண்டலைச் செல்வரெம் பாற்றுறை
எல்லா ரும்தொழும் ஈசரே. 2

2. பற்கள் நிறைந்த வெண்டலையணிந்த செல்வரும், திருப்பாற்றுறையில் எழுந்தருளியிருக்கும் எல்லோரும் தொழும்எம் ஈசருமாகிய சிவபிரான் நல்லவரும் (ஆயினும்) தீயர் என்றும் சொல்லப்படுவரும், நல்ல மலர் மாலையைச் சூடினவரும் ஆவர். (இவரே என் சிந்தையைத் தம்மிடம் செலச் செய்தவர் என்பது குறிப்பு).

நல்லவர்—உயிர்களுக்கு நன்மையைச் செய்பவர். தீயர்-நல்லவர் என்பதற்கு எதிராகக் கெடுதி செய்பவர் என்ற

பொருளையுடையது இச்சொல். ஆயினும் இங்கு எதிர்மறைப் பொருளில் உரைக்கப்படாமையால் இது சொல் முரண் எனப்படும்.

தியர் எனப்படும் சொல்லார்—சொல்லளவில் தீயர் எனப் படுபவர் (பொருளால் அன்று) ஆனால் பொருளளவில் இச் சொல் தீயை ஏந்தியவர், தீவண்ணர், தீவடிவமானவர் என்பன போன்ற பொருள்களைத்தரும்.

எல்லாருந்தொழும் ஈசர்—மக்களேயன்றி பிரமன்மால் உள்ளிட்ட தேவர்களும், மற்றும் முனிவர்கள் அசுரர்கள் முதலிய எல்லாரும் தொழும் ஈசர் என்றும், மக்களே யன்றி பிற உயிர்க் கூட்டங்களும் தொழும் ஈசர் என்றும் பக்குவான்மாக்களேயன்றிப் பக்குவம் அடையாதவர்களும் மற்றும் உள்ள பலவகையினருமாக அனைவரும் தொழும் ஈசர் என்றும் கொள்க.

விண்ணார் திங்கள் விளங்கும் நுதலினர்
எண்ணார் வந்தென் எழில்கொண்டார்
பண்ணார் வண்டினம் பாடல்செய் பாற்றுறை
உண்ணா ளாளும் உறைவரே. 3

3. வண்டுகளின் கூட்டம் பண்ணோடு பொருந்திய பாடல்களை இசைக்கும் திருப்பாற்றுறையில் எப்பொழுதும் உறைபவரும், விண்ணிலேயுள்ள பிறைச்சந்திரன் விளங்கும் நெற்றியினருமாகிய சிவபெருமான் (நான் அடையக் கூடிய துன்பத்தைச் சிறிதும்) எண்ணாதவராய் எனதெழிலைக் கவர்ந்து கொண்டு (பிரிந்து) சென்றார்.

பாற்றுறை உண்ணாளாளும்—பாற்றுறையுள் நாள் நாளும் எனப்பிரித்து உரை கொள்க. நுதல்—நெற்றி, இங்கு அதை யுடைய தலையைக் குறித்தது.

எண்ணார் வந்தென் எழில் கொண்டார்—தலைவனது பிரிவினால் தலைவி எய்தக் கூடிய துன்பத்தைச் சிறிதும் கருதா

பான லம்மலர் விம்மிய பாற்றுறை
வான வெண்பிறை மைந்தரே. 9

*9.* பன்றியின் வடிவையெடுத்துக் கொண்டு திருவடி தேடிய திருமாலுக்கும், அன்னத்தின் வடிவெடுத்துத் திருமுடி தேடிய நான்முகனுக்கும் (அவர்கள் தேடிக் காணாத படி) பெருந்தீப்பிழம்பாகிய எமது தலைவரே நீலோத்பல மலர்கள் பூத்துக் குலுங்கும் திருப்பாற்றுறையில் கோயில் கொண்டருளிய வானவெண்பிறை அணிந்த வீரராவார்.

வெந்த நீற்றினர் வேலினர் நூலினர்
வந்தென் நன்னலம் வௌவினார்
பைந்தண் மாதவி சூழ்தரு பாற்றுறை
மைந்தர் தாமோர் மணாளரே. 10

*10.* பசிய குளிர்ச்சி பொருந்திய (குளிர்ச்சி தருகின்ற) மாதவிச் சோலைகள் சூழ்ந்த திருப்பாற்றுறை மேவிய மைந்தரும் ஒரு மணாளருமாகிய சிவபெருமான் வெந்த நீறு பூசியவராய், கையில் வேலேந்தியவராய், திருமார்பில் முப்புரி நூல் அணிந்தவராய் வந்து என் அழகைக் கவர்ந்து சென்றார்.

எம்மணாளர் என்னாது ஓர் மணாளர் என்றது மலைமகளையும் அலைமகளையும் முன்னரே மணந்திருக்கின்றமை குறிப்பிக்க. (திருத்தருமையாதீனக் குறிப்புரை)

பத்தர் மன்னிய பாற்றுறை மேவிய
பத்து நூறு பெயரனைப்
பத்தன் ஞானசம் பந்தன தின்தமிழ் 11
பத்தும் பாடிப் பரவுமே.

திருச்சிற்றம்பலம்.

*11.* பத்தர்கள் நிலையாக வாழ்கின்ற திருப்பாற்றுறை மேவியவரும், பேராயிரம் உடைய பெருமானுமாகிய

சிவபிரானைப் பத்தனாகிய திருஞானசம்பந்தன் துதித்துப் பாடிய இனிய தமிழ்ப்பாடல்களாகிய இவை பத்தையும் பாடிப் பரவுவீர்களாக. (பாடிப் பரவின் பயன் பெறுவீர்கள் என்பது கருத்து).

பத்து நூறு பெயரன்—ஆயிரம் திருநாமம் உடையவன். ஆயிரம் என்பது அதனுடன் அமையாது பல்லாயிரக் கணக்கான திருநாமங்களையுடையவன் என்றும், பலவகை யான ஆயிரம் பெயர்களுடையவன் என்றும் உணர்த்தும். யாமறிந்த வரையில் 11 வகையான சிவஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்கள் உள்ளன. இவை தவிர வடுகபைரவ ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம், சிவரஹஸ்ய இதிஹாஸத்தில் உள்ள இரு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரங்கள், மற்றும் பத்தாயி ரம் திருநாமங்கள் உள்ள சிவ அயுதநாம ஸ்தோத்ரம் ஆகியவைகளும் உள்ளன. இவைகள் அனைத்தையும் பிர சுரித்துச் சிவபுண்ணியப் பேறடைய எவருக்குக் கொடுத்து வைத்துள்ளதோ ? இறைவரே அறிவார் ! மூன்று ஸஹஸ்ர நாமஸ்தோத்ரங்களை மட்டுமே எம்மால் இதுவரை பிரசுரிக்க முடிந்தது

திருமாலுக்கு மஹாபாரதத்தில் உள்ள ஒரே ஒரு ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் மட்டுமே உள்ளது என்பதையும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகிறோம்.

தலவரலாறு—காவிரி வடகரையில் 59-வது தலமான திருப்பாற்றுறை இக்காலத்தில் திருப்பாலத்துறை என வழங்குவதாக அறிகிறோம். இத்தலத்துக்கு வந்த மார்க் கண்டேயர் தமது சிவபூசைக்குப் பால் கிடைக்காது பெரிதும் வருந்தி இறைவரை வேண்டத் திருவருளால் பால் பெருகிய தால் திருபாற்றுறை என்ற பெயரைப் பெற்றதாகக் கூறப் படுகிறது.

திருஞானசம்பந்த சுவாமிகள் திருப்பதிகம் ஒன்று

(தொடர்ச்சி அடுத்த பக்கம்)

வார், ஊர், கார், நீர் என்னும் சொற்கள் 'உ'கரச் சாரியை பெற்று வாரு, ஊரு, காரு, நீரு என வந்தன. வார்—கச்சு; கார்—இருள், இது சோலையின் அடர்த்தியால் ஏற்படுவது. நீர்—கங்கையைக் குறித்தது.

நிருத்தனர் நீள்சடை மதியொடு பாம்பணி
கருத்தனர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
அருத்தனர் அழகமர் மங்கையோர் பாகமாப்
பொருத்தனர் கழலிணை போற்றுதல் பொருளதே. 2

2. திருக்கூத்தியற்றுபவரும், நீண்டசடையில் பிறைச் சந்திரனோடு பாம்பையும் அணியும் கருத்துடையவரும், மணம் மிக்க பொழில்கள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளியில் பொருள்வடிவாக உள்ளவரும், அழகுடைய உமாதேவி யாரை ஒரு பாகத்தில் பொருத்தியவருமாகிய சிவபெருமா னின் இரு திருவடிகளையும் போற்றுதலே பயனுடைய செய் கையாகும் (மற்ற செயல்கள் பயனற்றவை என்பது கருத்து).

நிருத்தனர்—''மன்றுள் நின்றுடல்'' என்பதன் குறிப்பு சிவக்கவிமணி). பதிகவரலாறு காண்க.

அருத்தனர்—பொருளாய் உள்ளவர். அறிவால் காணும் கருத்துப் பொருளாய் இருத்தலன்றித் திருக்காட்டு பள்ளியில் கண்ணுற் காணும் பொருள் வடிவாயும் இருப் பவர். (திருத்தருமையாதீனக் குறிப்புரை)

போற்றுதல் பொருளதே—'ஏ' காரத்தைப் போற்றுதல் என்பதனோடு இயைத்துப் 'போற்றுதலே பொருள்' எனக் கொள்க. பொருள் இங்குப் பயன்தரும் செய்கையைக் குறித்தது.

பண்ணினர் அருமறை பாடினர் நெற்றியோர்
கண்ணினர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
விண்ணினர் விரிபுனல் மேவினர் சடைமுடி
அண்ணலார் எம்மையா ளுடையஎம் அடிகளே. 3

3. பண்களோடு பொருந்திய அரிய மறைகளைப் பாடியவரும், நெற்றியில் ஒரு கண்ணையுடையவரும், மணம்வீசும் பொழில்கள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளியில் எழுந்தருளியவரும், ஆகாயகங்கையைச் சிரத்திலே தாங்கியவரும், சடைமுடியையுடைய தலைவருமாகிய சிவபிரானே எம்மை ஆட்கொண்ட கடவுளாவர்.

பணங்கொள்நா கம்மரைக் கார்ப்பது பல்பலி
உணங்கலோ டுண்கலன் உறைவது காட்டிடைக்
கணங்கள் கூடித்தொழு தேத்துகாட் டுப்பள்ளி
நிணங்கொள்சூ லப்படை நிமலர்தம் நிர்மையே. 4

4. இடையில் கட்டிக் கொள்வது பாம்பு, பலவிடங்களில் இடப்பட்ட பிச்சையாகிய உணவை உண்ணும் கலன் உலர்ந்த மண்டையோடு, பூதகணங்கள் புடை சூழ்ந்து தொழுது துதிக்கும்படி உறைவது சுடுகாட்டில், (இவை) திருக்காட்டுப்பள்ளியில் கோயில் கொண்டவரும், கொழுப்பு தோய்ந்த சூலப்படையையுடைய நிமலருமாகிய சிவபிரானின் இயல்புகளாகும். (இவ்வாறிருப்பினும் அவர் பெரியவர்; வழிபடுவார்க்கு இம்மை மறுமையாகிய இருவகைப் போகங்களையும் வழங்கியருளும் தலைவர் என்பது குறிப்பால் உணர்த்தப்பட்டது).

வரையுலாஞ் சந்தொடு வந்திழி காவிரிக்
கரையுலாம் இடுமணல் சூழ்ந்தகாட் டுப்பள்ளித்
திரையுலாங் கங்கையுந் திங்களும் சூடியங் (கு)
அரையுலாங் கோவணத் தடிகள்வே டங்களே. 5

5. மலைகளில் வளரும் சந்தனமரங்களோடு வந்து பாய்கின்ற காவிரி நதியின் கரையில் விளங்குகின்ற (அந்நதியால்) இடப்பட்ட மணல் பரப்புகள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளியில் எழுந்தருளிய அலைகள் புரளும் கங்கையாற்றையும் பிறைச்சந்திரனையுஞ் சூடி, இடையில் விளங்கும் கோவணத்துடன் விளங்கும் அடிகளின் வேடங்களே (தரிசித்தற்கும்,

வேழவெண்கொம் பொசித்தமாலும் விளங்கிய
நான்முகனும்
சூழவெங்கும் நேடவாங்கோர் சோதியுளா கிநின்றாய்
கேழல்வெண்கொம் பணிந்தபெம்மான் கேடிலாப்
பொன்னடியின்
நிழல்வாழ்வார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 9

வெஞ்சொல்தஞ்சொல் லாக்கிநின்ற வேடமிலாச் சமணும்
தஞ்சமில்லாச் சாக்கியருந் தத்துவமொன் றறியார்
துஞ்சலில்லா வாய்மொழியால் தோத்திரநின் னடியே
நெஞ்சில்வைப்பார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே.

நீடவல்ல வார்சடையான் மேயநெடுங் களத்தைச்
சேடர்வாழும் மாமறுகிற் சிரபுரக்கோன் நலத்தால்
நாடவல்ல பனுவன்மாலை ஞானசம்பந்தன் சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம்ப றையுமே. 11

திருச்சிற்றம்பலம்

பதிகப்பொழிப்புரை, தலவரலாறு முதலிய விசேடங்களை நமது மூவர் தமிழ்மாலை—1ல் [பக்கம் 20-23ல்] பிரசுரித்துள்ளோம். எனவே மீண்டும் இங்குக் கொடுக்கவில்லை. தலயாத்திரை முறையில் பதிகங்களை அமைக்கும் முறையைக் கையாண்டுவருவதால் தொடர்ச்சியாகப் பதிகங்கள் வரவேண்டுமென்பதற்காகப் பதிகத்தினை மட்டும் இங்குக் கொடுத்துள்ளோம்.

இறைவர் திருப்பெயர்—நித்தியசுந்தரர்; இறைவியார் திருப்பெயர்—ஒப்பிலாநாயகி.

சிவம்.



உ

சிவமயம்

ஶ்ரீ மஹாதேவஜயம்

# மேலைத் திருக்காட்டுப்பள்ளி

பதிகவரலாறு; — திருநெடுங்களத்தில் இடர் களையும் திருப்பதிகம் பாடிப்போற்றிய பின்னர் திருஞானசம்பந்தப் பிள்ளையார் செஞ்சடை எம்மானின் பிறபதிகளை அணைந்து வணங்கி, திருநியமத்தினைத் துதித்து மேலைத் திருக்காட்டுப் பள்ளியைச் சென்றடைந்து திருக்கோயில் முன்றில் வலமாக வந்து வணங்கிக் கைதொழுவாராகிக் கன்றினை அணையும் பசுவின் தன்மை போன்ற கருத்துடைய அன்பு திருவுள்ளத் திலே பொருந்த, கண்ணுதற்பெருமானின் திருமுன்பு நின்று துதித்து, அம்பலத்துள் ஆடுகின்ற திருக்கூத்தினைத் தமது மனத்துட் கொண்டு பாடி வாழ்வு பெற்றருளியது இத் திருப்பதிகம்.

பண்—கொல்லி] திருச்சிற்றம்பலம் [3-ம் திருமுறை

வாருமன் னும்முலை மங்கையோர் பங்கினன்
ஊருமன் னும்பலி யுண்பதும் வெண்டலை
காருமன் னும்பொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நீருமன் னுஞ்சடை நிமலர்தம் நீர்மையே. 1

பதிகப்பொழிப்புரை:—1. கச்சணிந்த திருத்தனபாரங் களையுடைய உமாதேவியாரை ஒரு பங்கிலே உடையவர். ஊராரிடும் பிச்சையை ஏற்று வெண்டலையாகிய உண்கலத் தில் உண்பவர். (இவ்வாறிருத்தல்) இருள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளியில் கோயில் கொண்ட கங்கையாறு நிலையாக இருக்கும் திருச்சடைமுடி யையுடைய நிமலராகிய சிவபிரானது தன்மையாகும்.

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவ ஜயம்

# திருநெடுங்களம்

பதிகவரலாறு:—ஏறுயர்த்திய சிவபிரானுர் கோயில் கொண்டருளிய திருப்பாற்றுறை, திருவெறும்பியூர் முதலான பதிகள் பலவற்றையும் போற்றி மகிழ்ந்து, திருத்தொண்டர்கள் புடைசூழத் திருஞானசம்பந்தப் பெருமானுர் திருநீறணிந்த செம்பவளமலை போன்று திகழும் சிவபிரானுர் எழுந்தருளிய திருநெடுங்களம் என்ற தலத்தைச் சென்றடைந்தார். அங்கு ஆதி முதல்வரைப் பணிந்து, ''தேவரீர்பால் அன்புடன் மனம் செல்லாதபடி நேர்மையினின்றும் விலக்குகின்ற இடர்களையெல்லாம் தீர்த்தருள்வீர்'' என வேண்டிப் பாடிய இன்னிசையின் தமிழ்மாலை இத்திருப்பதிகம்.

பண்—பழந்தக்கராகம்] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

மறையுடையாய் தோலுடையாய் வார்சடைமேல் வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப்பே சினல்லால்
குறையுடையார் குற்றம்ஓராய் கொள்கையினு லுயர்ந்த
நிறையுடையார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே: 1

---

(41ம் பக்கத் தொடர்ச்சி)

மட்டுமே பெற்ற இத்தலம் திருவானைக்காவிலிருந்து கிழக்கே சுமார் 8 கி. மீ. தொலைவில் உள்ளது.

இறைவர் திருப்பெயர்—திருமூலநாதர், ஸ்ரீ மூலநாதேசுவரர்; இறைவியார் திருப்பெயர்—மோக நாயகி, மேகலாம்பிகை; தீர்த்தம்—திருக்குளம்.

சிவம்.

கனைத்தெழுந்த வெண்டிரைசூழ் கடலிடைநஞ் சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில்வைத்த திருந்தியதே வநின்னை
மனத்தகத்தோர் பாடலாடல் பேணியிராப் பகலும்
நினைத்தெழுவார் இடர்களையாய் நெடுங்களம்
மேயவனே. 2

நின்னடியே வழிபடுவான் நிமலாநினைக் கருத
என்னடியான் உயிரைவவ்வேல் என்றடற்கூற் றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடுநீர் சுமக்கும்
நின்னடியார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 3

மலைபுரிந்த மன்னவன்றன் மகளையோர்பால் மகிழ்ந்தாய்
அலைபுரிந்த கங்கைதங்கும் அவிர்சடையா ரூரா
தலைபுரிந்த பலிமகிழ்வாய் தலைவநின்றாள் நிழற்கீழ்
நிலைபுரிந்தார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 4

பாங்கினல்லார் படிமஞ்செய்வார் பாரிடமும் பலிசேர்
தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழலே வணங்கித்
தாங்கிநில்லா அன்பினோடுந் தலைவநின்றாள் நிழற்கீழ்
நீங்கிநில்லார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 5

விருத்தனாகிப் பாலனாகி வேதமோர்நான் குணர்ந்து
கருத்தனாகிக் கங்கையாளைக் கமழ்சடைமேற் கரந்தாய்
அருத்தனாய ஆதிதேவன் அடியிணையே பரவும்
நிருத்தர்கீதர் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 6

கூறுகொண்டாய் மூன்றுமொன்றாக் கூட்டியோர்வெங்
கணையால்
மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே கொடிமேல்
ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமா னணிந்த
நீறுகொண்டார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 7

குன்றினுச்சி மேல்விளங்குங் கொடிமதில்சூழ் இலங்கை
அன்றிநின்ற அரக்கர்கோனை யருவரைக்கீழ் அடர்த்தாய்
என்றுநல்ல வாய்மொழியா லேத்தியிராப் பகலும்
நின்றுநைவார் இடர்களையாய் நெடுங்களம் மேயவனே. 8

தியானித்தற்கும்; தொழுது துதித்தற்கும் உரியவை என்றவாறு). (சில சொற்கள் வருவித்து உரைக்கப்பட்டன).

திருந்துதேவன்குடித் திருப்பதிகம் இறைவனின் வேடச் சிறப்பையே உரைத்தல் காண்க.

வேதனுர் வெண்மழு ஏந்தினுர் அங்கமுன்
ஓதினுர் உமையொரு கூறனுர் ஒண்குளழக்
காதினுர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
நாதனுர் திருவடி நாளும்நின் றேத்துமே. 6

6. வேதங்களின் பொருளானவரும், வெண்மையான மழுவாயுதத்தை ஏந்தியவரும், ஆறு அங்கங்களேயும் முன் உரைத்தவரும், உமாதேவியாரை ஒரு பாகமாக உடையவரும், ஒள்ளிய குழையணிந்த திருச்செவியையுடையவரும், மணம் மிக்க பொழில்கள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளியில் எழுந்தருளிய தலைவருமாகிய சிவபிராஞரது திருவடிகளேயே நாள்தோறும் துதிப்பீர்களாக. (துதிப்பின் அவர் அருள் பெறுவீர் என்பது கருத்து).

வேதனுர்—வேதங்களே அருளிச்செய்தவர், வேதங்களால் பரம்பொருள் என்று போற்றப்படுபவர். நாதன்—தலைவன், கடவுள், நாயகன் (கணவன்).

அங்கம்—வேதாங்கம் ஆறு; இவை சிக்ஷை, கற்பம், வியாகரணம், நிருத்தம், சந்தோபிசிதம், சோதிடம் என்பனவாம்.

மையினுர் மிடறனுர் மான்மழு வேந்திய
கையினுர் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
தையலோர் பாகமாத் தண்மதி சூடிய
ஐயனுர் அடிதொழ அல்லலொன் றில்லையே. 7

7. கருமை நிறம் நிறைந்த திருக்கழுத்தையுடையவரும், மான் மழு இவைகளேயேந்திய திருக்கரங்களே

உடையவரும், மணம் மிக்க பொழில்கள் சூழ்ந்த திருக் காட்டுப்பள்ளியில் எழுந்தருளிய தலைவரும், உமாதேவியார் ஒரு பாகமாக இருக்கக் குளிர்ச்சி பொருந்திய சந்திரனைச் சிரத்தில் சூடிய கடவுளுமான சிவபிரானது திருவடிகளைத் தொழ (அங்ஙனம் தொழுவார்க்கு) துன்பம் என்பது ஒன்றும் இல்லை என்பதாம்.

காட்டுப்பள்ளி ஐயனார், தண்மதி சூடிய ஐயனார் என இருவகையாகவுங் கூட்டிப் பொருள் உரைக்கப்பட்டது. ஐயனார்—தலைவன், கடவுள்.

சிலைதனுல் முப்புரஞ் செற்றவன் சீரினார்
மலைதனுல் வல்லரக் கன்வலி வாட்டினான்
கலைதனார் புறவணி மல்குகாட் டுப்பள்ளி
தலைதனுல் வணங்கிடத் தவமது ஆகுமே. 8

8. மலையாகிய வில்லினால் மூன்று புரங்களையும் அழித் தவரும், பெருமை பொருந்திய திருக்கயிலாய மலையினால் வல்லரக்கனாகிய இராவணனது வலிமையை அழித்தவரும், மான்கள் வசிக்கும் முல்லை நிலத்தால் அழகு மிகுந்த திருக் காட்டுப்பள்ளியைத் தலையினால் வணங்கிட (அங்ஙனம் வணங்குபவர்களுக்கு) அதுவே (பெரிய) தவமாகும். (உடலை வருத்திச் செய்யும் வேறு தவம் ஏதும் வேண்டாம் என்றவாறு).

சிலைதனுல், மலைதனுல், கலைதனார், தலைதனுல்—இவற் றில் வரும் தன் என்ற நான்கும் அசைச் சொற்கள். கலை— மான்; புறவு—முல்லை நிலம், அஃதாவது காடும் காடு சேர்ந்த இடமுமாம்.

சீரினார்மலை—பெருமை நிறைந்தமலை; திருக்கயிலைக்குப் பெருமையாவது, உலகமெல்லாம் அழியும் ஒவ்வொரு பிர ளயத்தும் தான் அழியாது நிற்றலேயன்றி, வளரும் தன்மை யுடையதாதலாம். "ஊழிதோறூழி முற்றும் உயர் பொன்

நொடித்தான் மலையைச்......'' என்ற நம்பிகள் தேவாரம் காண்க. (7ம் திருமுறை, திருநொடித்தான்மலை-10)

செங்கண்மால் திகழ்தரு மலருறை திசைமுகன்
தங்கையால் தொழுதெழத் தழலுரு வாயினான்
கங்கையார் சடையினான் கருதுகாட் டுப்பள்ளி
அங்கையால் தொழுமவர்க் கல்லலொன் றில்லையே. 9

*9.* சிவந்த கண்களையுடைய திருமாலும், விளங்குகின்ற தாமரைமலரில் உறைகின்ற பிரமதேவனும் (அடி முடி காணமாட்டாது) தங்கள் கைகளால் தொழுதெழும்படித் தழல் உருவாக ஆயினாரும், கங்கையாறு தங்கும் திருச் சடையை உடையவரும், திருக்காட்டுப்பள்ளியில் கோயில் கொண்டவருமான சிவபிரானைத் தங்கள் கைகளால்தொழு பவர்களுக்குத் துன்பம் என்பது ஒன்றும் இல்லையாம்.

தங்கையால் தொழுதெழ என்று கூறியது, தழல் உருவின் அடிமுடி காணாது சோர்ந்து பிறகு நல்லறிவு வரப் பெற்று இறைவனைப் பூசித்து அருள் பெற்றதைக் குறித்தது.

போதியார் பிண்டியார் என்றஅப் பொய்யர்கள்
வாதினால் உரையவை மெய்யல வைகலும்
காரினார் கடிபொழில் சூழ்ந்தகாட் டுப்பள்ளி
ஏரினால் தொழுதெழ இன்பம்வந் தெய்துமே. 10

*10.* பௌத்தர்கள், சமணர்கள் என்ற அப்பொய்யர் கள் வாதத்தினால் உரைக்கும் வார்த்தைகள் மெய்யல்ல. (எனவே அவைகளைப் புறக்கணித்து) இருள் நிறைந்த மணம் மிகுந்த பொழில்கள் சூழ்ந்த திருக்காட்டுப்பள்ளியை (திருக் காட்டுப்பள்ளி ஈசனை) நாள் தோறும் சிறந்த சொன்மாலை களால் வழிபட இன்பம் (தானாக) வந்து சேரும். (முன் திருப்பாடலில் துன்பம் இல்லை என்றருளிய பிள்ளையார் இப்பாடலில் துன்பத்துக்கு மாறாக இன்பம் வந்து சேரும் என்று உபதேசித்தருளியதாகக் கொள்க).

ஏரினல்—சொல்மாலை அதாவது தோத்திரப் பாடல்களால். ''ஏரே சொன்மாலை'' என்பது அரும்பொருள் விளக்க நிகண்டு.

வந்து எய்தும் என்றது தொழுதாலே போதும்; வேறு செயல்கள் வேண்டா; இன்பம் தானகவே வந்தடையும் என்று உணர்த்தியதாம்.

பொருபுனல் புடையணி புறவநன் னகர்மன்னன்
அருமறை யவைவல்ல அணிகொள்சம் பந்தன்சொல்
கருமணி மிடற்றினன் கருதுகாட் டுப்பள்ளி
பரவிய தமிழ்சொலப் பறையும்மெய்ப் பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

11. மோதிப் பாய்கின்ற நீர் பக்கங்களில் சூழ்ந்த திருப்புறவம் என்ற சீகாழி மக்களுடைய தலைவனுகியவனும் அரிய வேதங்களில் வல்லவனுமாகிய அழகிய திருஞான சம்பந்தன் சொன்னதும், கருமணி போன்று விஷம் விளங்கும் திருக்கழுத்தையுடைய சிவபிரான் (தான் கோயில் கொள்ளத்தக்க இடம் என்று) கருதிய திருக்காட்டுப்பள்ளியைத் துதித்துப் பாடியதுமான இத்தமிழ்ப் பாக்களைச் சொல்ல (அதனல்) பாவங்கள் நீங்கும். (இது) உண்மை என்றவாறு.

ஈற்றடி ''பரவிய தமிழ் சொல்லப் பாவம் பறையும், (இது) மெய்'' என்று மாற்றியுரைத்துப் பொருள் கொள்ளப்பட்டது இவ்வாறின்றி, ''மெய்ப்பாவம்'' என்றே சேர்த்து ''வலிய பாவம்'' என்ற பொருள் திருப்பனந்தாள் பதிப்பில் காணப்படுகிறது.

தலவரலாறு:—காவிரி தென்கரைத் தலங்களுள் மேலைத் திருக்காட்டுப்பள்ளி 9வது தலம் ஆகும். உறையூரில் ஆண்ட பராந்தக சோழன் சிவபெருமானுக்குரிய செவ்வந்திப் பூவைத் தனது மனைவிக்கு ஆக்கக் கவர்ந்துவரச் செய்து

கொடுக்க, அது சிவாபராதம் என்று அஞ்சி மனைவி அதனை அனுபவியாது விடுத்தனள். அரசன் செய்த சிவாபராதத்தினுல் மண்மாரி பெய்து நகரம் அழிந்தது. சிவாபராதத்துக்கு அஞ்சிய மனைவி அதினின்றும் தப்பி வந்தனளாக அவளுக்கு அருளியதலம். (சிவக்கவிமணியவர்களின் பெரிய புராணப் பேருரை, 3-ம் பகுதி, முதல்பாகம், பக்கம் 509). அப்பரடிகள் பதிகம் ஒன்று, திருஞானசம்பந்த சுவாமிகள் பதிகம் ஒன்று ஆக இரண்டு திருப்பதிகங்கள் பெற்ற தலம்.

இது தஞ்சாவூர் - திருச்சி இருப்புப்பாதையில் பூதலூர் நிலயத்திற்கு வடக்கே சுமார் 8 கிலோமீட்டர் தொலைவில் காவிரியிலிருந்து குடமுருட்டி ஆறு பிரியுமிடத்தில் குடமுருட்டியின் தென்கரையில் உள்ளது. திருக்கண்டியூர், திருவையாறு ஆகிய தலங்களிலிருந்தும் இப்பதியை அடையலாம்.

இறைவர் திருப்பெயர்—தீயாடியப்பர்; இறைவியார் திருப்பெயர்—வார்கொண்டமுலையாள், சௌந்தரநாயகி.

சிவம்



உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருக்கண்டியூர் வீரட்டம்

**பதிகவரலாறு,**—மேலைத்திருக்காட்டுப்பள்ளியில் இறைவரைத் துதித்துப் பாடிய பின்னர், திருஞானசம்பந்தப் பெருமானுர் அப்பதியினின்றும் எழுந்தருளித் திருவாலம் பொழில், திருப்பூந்துருத்தி ஆகிய தலங்களையும் மற்றும் உள்ள எல்லாத் தலங்களையும் தொழுது, திருக்கண்டியூர் தொழும் விருப்பத்துடன் அங்குச் சென்றணைந்தருளினுர்.

திருக்கண்டியூர் வீரட்டானத்துத் திருக்கோயிலை அடைந்து, அடியார்களுடன் காதல் கொள்ளக் கலந்து, விருப்புடன் சூழ்ந்து இறைஞ்சி, மகிழ்ச்சி மீதூரத் தொண்டர் குழாத்தினை நோக்கி நின்று, அண்டர்பிரான் அருளின் வண்ணம் அடியார் பெருமையிற் கேட்டருளித் தொடுத்த இசைமாலை இத்திருப்பதிகம்.

இத்திருப்பதிகம் வினுவுரை என்று வழங்கப்படுகிறது. திருஞானசம்பந்தப் பெருமானே இத்திருப்பதிகக் கடைக்காப்பில் "......அடியார்பால் மிகக்கேட்டுகந்த வினுவுரை" என்று குறிப்பிட்டுள்ளார். இத்திருப்பதிகம் பற்றிக் கோவை சிவக்கவிமணியவர்கள் தமது பெரியபுராணப் பேருரையில் கூறியிருப்பதாவது, "இறைவர் திருமுன்பு நின்றபடியே தொண்டர்களை முன்னிலைப்படுத்தி இறைவர் புகழ்களை அவர்கள்பால் கேட்பது புகழ்பாடும் முறைகளுள் ஒன்று; இறைவரை முன்னிலையாக்கிக் கூறுதல் - உலகரை முன்னிலையாக்கிக் கூறுதல் - தனிப்பட்டவர்களை முன்னிலை

யாக்குதல் - என்று பலவகைகளாலும் இறைவர் புகழ் பாடும் வகைகளைப் பிள்ளையார் தேவாரங்களுட் காணலாம். இங்குக் காண்பது அவற்றுட் சிறந்ததொரு முறையாகும் என்பதாம்.

"இறைவர் புகழ்களை அடியார்பால் கேட்டல் மகிழ்தற் பொருட்டேயன்றி அறிந்து கோடற்பொருட்டன்று என்பதாம்".

பண்—கொல்லி] வினாவுரை [3-ம் திருமுறை

திருச்சிற்றம்பலம்

வினவினேன்அறி யாமையில்லுரை
செய்ம்மினீரருள் வேண்டுவீர்
கனைவிலார்புனற் காவிரிக்கரை
மேயகண்டியூர் வீரட்டன்
தனமுனேதனக் கின்மையோதம
ராயினாரண்ட மாளத்தான்
வனனில்வாழ்க்கைகொண் டாடிப்பாடியிவ்
வையமாப்பலி தேர்ந்ததே. 1

பதிகப்பொழிப்புரை:—1. இறைவரது திருவருளை வேண்டுகின்ற அடியவர்களே! (இறைவரது திருவருட் டன்மைபற்றி) வினவுகின்றேன். (கேட்போர்க்கு) அறியாமை இல்லாதவாறு (அவர் முற்றிலும் அறியுமாறு) விடை கூறுவீர்களாக. பேரொலியுடன் கூடிவரும் நீர் நிறைந்த காவிரிக்கரையில் உள்ள திருக்கண்டியூரில் விருப்பத்துடன் எழுந்தருளியிருக்கும் திருவீரட்டப்பெருமான் தன்னைச்சார்ந்த அடியவர்களான பிரமன் திருமால் இந்திரன் முதலானோர் அண்டங்களை அரசாட்சி செய்யத் தான் காட்டையே இல்லமாகக்கொண்டு இவ்வுலகில் ஆடியும் பாடியும் பெரும் பிச்சையெடுப்பது தனக்கு முன்னோர் தேடி வைத்த பொருள் இன்மையாலா?

தமர்—தன்னைச் சார்ந்தவர், தன்னை வழிபடும் அடியவர்களான பிரமன் திருமால் இந்திரன் முதலானோரைக் குறித்து நின்றது. அவர்கள் சிவபெருமானைப் பூசித்து அப்பூசையின் பயனாலேயே சத்தியலோகம், வைகுண்டலோகம், தேவலோகம் ஆகியவற்றை முறையே ஆளுகின்றனர் என்பதை நூல் பிரமாணங்களால் அறியலாம். தன்னை வழிபட்டோர்க்கு இறைவனார் அருளிய வரப்பிரசாதமே அவர்சள் ஆட்சி நடத்துதற்குக் காரணமேயன்றி முன்னே தனம் படைத்தவர் என்பதல்ல.

இறைவனார் பலி தேர்ந்ததும் அவரது திருவருட்டன்மை காரணத்தினாலேயன்றி முன்னே தனம் இன்மையாலன்று என்பது குறிப்பாகப் புலப்படுத்தப்படுகிறது. இறைவர் பலி தேர்ந்த காரணத்தையும் மற்றும் இத்திருப்பதிகத்தில் வரும் ஏனைய அருட்செயல்களின் வரலாற்றையும் கந்த புராணம் ததீசி உத்தரப்படலத்தில் காண்க. எமது மற்றொரு வெளியீடாகிய சிவபரத்துவ மாட்சிமை அல்லது தக்ஷகாண்டம் என்ற நூலிலும் காணலாம்.

இத்திருப்பாடலில் வினவியருளிய செய்தி மட்டுமன்றி மற்றப் பாடல்களில் வரும் அனைத்துச் செய்திகளையும் அவற்றின் உண்மையையும் ஞானபோனகரான பிள்ளையார் அறியாதவரா? இச்செயல்கள் அனைத்தையும் தமது மற்ற திருப்பதிகங்களில் போற்றிப் பாடியுள்ளாரே! அங்ஙனமறிந்திருந்தும் வினவுவானேன் எனில், இறைவரது பொருள் சேர் புகழ்களை அடியார்கள்பால் கேட்டு மகிழ்தலே காரணமாகும். எனவே 'வினவினேன் அறியாமையில்' என்பதற்கு அறியாமையால் வினவினேன் என்று கூறியதாகப் பொருள் கொள்ளுதல் பிழை என்பது கற்றலும் கேட்டலும் உடைய பெரியோர்களின் கருத்து. இக்கருத்தையே பின்பற்றி "அறியாமை இல்லாதபடி உரை செய்ம்மின்" என்ற பொருளையே யாமுங்கொண்டோம். ஆயின், மூன்றாவது திருப்பாடலில் "அறிகின்றிலேன் அரன் செய்கையை"

எனத் தெளிவாகக் கூறியிருப்பது எற்றுக்கோவெனின் அத் திருப்பாடலின் உரையில் அதுபற்றிச் சிறிது ஆராய்ந்து அமைதி காண்போம்.

உள்ளவாறெனக் குரைசெய்ம்மின்னுயர்
வாயமாதவம் பேணுவீர்
கள்ளவிழ்பொழில் சூழுங்கண்டியூர்
வீரட்டத்துறை காதலான்
பிள்ளைவான்பிறை செஞ்சடைம்மிசை
வைத்ததும்பெரு நீரொலி
வெள்ளந்தாங்கிய தென்கொலோமிகு
மங்கையாளுட னாகவே. 2

2. சிவனடிமைத் திறமாகிய உயர்ந்த பெருமை யுடைய தவத்தைப் போற்றுகின்றவர்களே! மலர்கள் கட்டவிழ்ந்து தேன்பொழியும் சோலைகள் சூழ்ந்த திருக் கண்டியூர் வீரட்டம் என்னுமித்தலத்தில் வாழ்வதில் பெரு விருப்புடையவராகிய சிவபெருமான் தமது சிவந்த சடை யின்மீது வானில் திகழும் இளம்பிறையை வைத்ததும், எல்லாவகையிலும் உயர்ந்த உமையாள் உடனிருக்கவும் பேரொலியுடன் கூடிய நீர்வெள்ளமாகிய கங்கையினையும் (அச்சடையின்மீது) தாங்கியது எக்காரணம் பற்றியோ? உள்ளவாறு எனக்குக் கூறுவீர்களாக. (மிகுமங்கை—பெண் ணின் நல்லவளாகிய பெருந்தவக்கொழுந்து, உமையம்மை யார்).

அடியராயினீர் சொல்லுமின்அறி
கின்றிலேன்அரன் செய்கையைப்
படியெலாந்தொழு தேத்துகண்டியூர்
வீரட்டத்துறை பான்மையான்
முடிவுமாய்முத லாயிவ்வைய
முழுதுமாயழ காயதோர்
பொடியதார்திரு மார்பினிற்புரி
நூலும்பூண்டெழு பொற்பதே. 3

3. பரம்பொருளுக்கு அடியராயின பெருமையாளர்களே! சிவபிரானது செய்கைகளின் திறங்களையெல்லாம் (முழுமையாக) அறிகின்றிலேன். திருக்கண்டியூர் வீரட்டம் என்னுமித்தலத்தில் எழுந்தருளியுள்ளவரும், எல்லாவுலகமும் தொழுது துதிக்கும் பெருமையாளரும், இவ்வுலகத்துக்கு முடிவுமாய் முதலுமாய் மற்றும் வையக முழுதுமாய் நின்றவருமாகிய சிவபெருமான், திருநீறு பொருந்திய தமது அழகிய திருமார்பினில் ஒரு முப்புரிநூலும் பூண்டு எழும் பொற்புடைய தோற்றம் ஏன்? சொல்லுவீர்களாக.

முற்றுமாயினார்க்கு நீறும் நூலும் வேறன்றே என்பது குறிப்பு. முடிவு - முதல் - ''ஈறே முதல்,'' ''அந்தமாதி'' என்பது ஞானசாத்திரம், சங்காரமும் புனருற்பவமுங் குறித்தன. (கோவைச் சிவக்கவிமணி அவர்களின் பதிகப் பாட்டுக் குறிப்பு).

முடிவு-முதல்—''அந்தமாய் உலகாதியுமாயினார்'' என்ற பிள்ளையாரின் திருவாரூர்த் திருப்பதிகப் பாடற்பகுதியும் இங்கு நினைவு கூர்க.

முதல் திருப்பாடலின் உரைப்பகுதியில் எம்மால் உரைக்கப்பட்டபடி திருஞானசம்பந்தப் பெருமானார் எல்லாமறிந்தவராயினும் ''அறிகின்றிலேன் அரன் செய்கையை'' என்றருளிச் செய்தது பொருந்துமாறு எங்ஙனமெனில், சில கூறுதும்.

1) அனைத்தையுமறிந்தவராயினும் பெரியோர்கள் தம் பெருமையைத் தாமே கூறிக்கொள்ளமாட்டார்கள். அறியாதவராகவே தம்மைக் காட்டிக் கொள்வார்கள். இது தன்னடக்கத்தின் பாற்படும்.

2) பிறருடைய குற்றங்களைத் தம்மீது ஏற்றிப்பாடுவது மகான்களின் மரபு. ''குலம் பொல்லேன், குணம் பொல்லேன், குறியும் பொல்லேன், குற்றமே பெரிதுடையேன்,

கோலமாய நலம் பொல்லேன், நான் பொல்லேன், ஞானி யல்லேன், நல்லாரோடு இணங்கிலேன்......'' என்பன போன்ற அருள்மொழிகளைக் காண்க. (அப்பரடிகள், தனித் திருத்தாண்டகம்). அம்முறையில் பிறரது அறியாமையை யும் தம்மீது ஏற்றிப் பிள்ளையார் பாடியிருக்கலாம். எனவே பெரியோர்களுடைய இத்தகைய திருவாக்குகளை அப்படியே கொண்டு அபசாரப்படாது உபசாரமாகவே கொண்டு உய்யவேண்டும்.

3) சிவபிரானின் திருவருட்டன்மையை முற்றுமுணர்ந் தவர் எவரும் இலர் என்பதே பெரியோர்களின் துணிபு. ''யாரறிவார் எங்கள் அண்ணல் பெருமையை'' (திருமூலர்) ''இன்னதன்மையன் என்றறியாச் சிவன் (சேக்கிழார்)'' ''ஆயினும் பெரியர், யாரறிவார் அவர் பெற்றியே'' (திருஞானசம்பந்தர்)'' ''இன்னதன்மையன் என்றறி வொண்ணு எம்மானை'' (நம்பிகள்) என்பன போன்ற அருள் வாக்குகள் காண்க. இக்கருத்தை வலியுறுத்தும் திருமுறை வாக்குகள் மேலும் பல உள. விரிவஞ்சிவிடுத்தோம். எனவே திருஞானசம்பந்தப் பெருமான் முழுதுமறிகின்றி லேன் என்ற கருத்தில் உரைத்தார் எனக்கோடலும் பொருந்துவதேயாம்.

4) அறிவாற்சிவனே என்று போற்றப்படும் மாணிக்க வாசக சுவாமிகள் தாமருளிய திருக்கோவையாரில் ''உணர்ந் தார்க்குணர்வரியோன் தில்லைச்சிற்றம்பலத்தொருத்தன்'' (9-ம் திருப்பாடல்) எனப்பாடியுள்ளதும், இப்பாடலின் உரையில், ''உணர்ந்தார்க்குணர்வரியோன்'' என்பதற்கு ''தவத்தானும் தியானத்தானும் எல்லாப்பொருள்களையும் உணர்ந்தவர்க்கும் உணர்வரியோனெனினும் அமையும்'' எனவும் ''இப்பொருட்கு உணர்ந்தார்க்குமென உம்மை வருவித்துரைக்கப்பட்டது'' எனவும் பேராசிரியர் உரை வகுத்திருப்பதும் இங்குக் கருத்தில் கொள்க.

(மேலேயுள்ளவை தேவகோட்டை சைவ சித்தாந்த சரபம் சிவஸ்ரீ தத்புருஷதேசிகர், கோவைப் பேரறிஞர் திரு. சி. சு. கண்ணுயிரம், இராணிப்பேட்டைப் பெரும் புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனுர், கிருஷ்ணகிரிப் பேராசிரியர் டாக்டர் பெ. கு. வரதராசனுர், சென்னை வித்துவான் திரு. அம்பை சங்கரனுர் ஆகிய அறிஞர் பெரு மக்கள் உதவிய கருத்துக்களைத் தழுவி எழுதப்பட்டன).

**பழையதொண்டர்கள் பகருமின்பல**
**வாயவேதியன் பான்மையைக்**
**கழையுலாம்புனல் மல்குகாவிரி**
**மன்னுகண்டியூர் வீரட்டன்**
**குழையொர்காதினிற் பெய்துகந்தொரு**
**குன்றின்மங்கை வெருவுறப்**
**புழைநெடுங்கைநன் மாவுரித்தது**
**போர்த்துகந்த பொலிவதே.** 4

4. இறைவருடைய பழைய அடியவர்களே! (புத்தடி யேன்) வினவுகின்றேன். பலபலவடிவமாகிய வேதியனுஞ் சிவபெருமானின் பெருமையைக் கூறுவீராக. மூங்கில்கள் அடித்துக்கொண்டு வரப்படும் நீர்ப்பெருக்கையுடைய காவிரிக் கரையில் நிலைபெற்றுள்ள திருக்கண்டியூர் வீரட்டப் பெருமான் ஒரு திருக்காதில் குழைதரித்து மகிழ்ந்து, மலையரசன் மகளான பார்வதி தேவியார் அஞ்சும் வண்ணம் ஒரு யானையை உரித்து அத்தோலைப் போர்த்துகந்தபொலிவு ஏன்?

குழை - ஆண்களின் காதணி. இது வெண்சங்கினுல் செய்யப்படுவது. புழைநெடுங்கை நன்மா-துளையையுடைய நீண்டகையையுடைய (துதிக்கையையுடைய) யானை. இங்கு அதன் வடிவமான கயாசுரனைக் குறித்தது. 'கயாசுரனை உரித்தபொழுது உமாதேவியாரும் அஞ்சினுர் என்பதைத் திருஞானசம்பந்தப் பெருமானுர் மேலும் சிலபதிகத் திருப் பாடல்களிலும் குறிப்பிட்டுள்ளார்.

விரவிலாதுமைக் கேட்கின்றேனடி
விரும்பியாட்செய்வீர் விளம்புமின்
கரையெலாந்திரை மண்டுகாவிரிக்
கண்டியூருறை வீரட்டன்
முரவமொந்தை முழாவொலிக்க
முழங்குபேயொடுங் கூடிப்போய்ப்
பரவுவானவர்க் காகவார்கடல்
நஞ்சமுண்ட பரிசதே. 5

5. இறைவரது திருவடிக்கே விரும்பி ஆளாகிப் பணி புரியும் அடியவர்களே! திருத்தொண்டர்களிடம் கலத்தலின்மை காரணமாக உங்களைக் கேட்கின்றேன். கரையின் மேலெல்லாம் அலைகள் மோதுகின்ற காவிரிக்கரையில் உள்ள திருக்கண்டியூர் வீரட்டப் பெருமான் முரவம் - மொந்தை - முழவம் முதலிய வாத்தியங்கள் ஒலிக்க ஆரவாரஞ் செய்யும் பேய்க்கணங்களுடன் கூடிப்போய்த் தன்னைத் துதித்து நிற்கும் வானவர்களைக் காப்பதற்காக நெடுங்கடலினின்றும் தோன்றிய நஞ்சினை உண்ட பரிசினை அடியேனுக்கு உரைப்பீராக.

விரும்பி ஆட்செய்வீர்— ''விற்றுக் கொள்வீர், ஒற்றியல்லேன், விரும்பி ஆட்பட்டேன்'' என்பது நம்பிகள் திருவாக்கு. (7ம் திருமுறை, திருவாரூர்)

விரவிலாது—விரவுதல் இலாது அஃதாவது 'தொண்டர்கள் நடுவுள் இருக்கப்பெறுது என்பதாம். மெய்த்தொண்டர்கள் எப்பொழுதும் அடியார் நடுவுள் இருப்பதையே விரும்புவர். அங்ஙனம் இருக்கப் பெறுத நிலையில் பெரிதும் வருந்துவர். நரகம் புகினும் அடியாரொடு இருக்கப் பெறின் அதை வெறுக்கமாட்டார்கள். ''கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு; குடி கெடினும் நள்ளேன் நினது அடியாரொடு அல்லால்; நரகம் புகினும் எள்ளேன் திருவருளாலே இருக்கப் பெறின்'' எனவும் (திருச்சதகம்—2)

"உன் அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய் - பொன்னம்பலத்து ஆடும் முடியாமுதலே......" எனவும் (கோயில் மூத்த திருப்பதிகம்) மாணிக்கவாசக சுவாமிகள் அருளியிருத்தல் காண்க. அப்பரடிகள் எப்பொழுதும் அடியார்களோடு கூடியிருந்தும் "...உண்டுகொலோ......தொண்டர்க்குத் தொண்டராம் புண்ணியமே" என்று அருளிச் செய்துள்ளதும் கருதுக. (திருவாரூர் திருவிருத்தம்).

திருஞானசம்பந்தப் பிள்ளையார் பதினயிரக்கணக்கான அடியார்களோடு எப்பொழுதும் கலந்திருந்தும் இவ்வாறு விரவிலாது உமைக்கேட்கின்றேன்" எனக் கூறியருளியது நம் போன்றோர்களுக்காக என்க.

இயலுமாறெனக் கியம்புமின்இறை
வன்னுமாய்நிறை செய்கையைக்
கயல்நெடுங்கண்ணி னர்கள்தாம்பொலி
கண்டியூருறை வீரட்டன்
புயல்பொழிந்திழி வானுளோர்களுக்
காகவன்றயன் பொய்ச்சிரம்
அயனகவ்வ தரிந்துமற்றதில்
ஊனுகந்த அருத்தியே. 6

6. அனைத்து உலகுக்கும் உலகுயிருக்கும் தலைவனுமாய் அவையேயாகியும், அவற்றுள் உடனாய் நிறைந்தும் நின்ற சிவபெருமானின் செய்கையை பொருந்தும் வண்ணம் எனக்குக் கூறுங்கள். மீன் போன்ற நீண்ட கண்களையுடைய பெண்கள் பொலிவுடன் விளங்கும் திருக்கண்டியூரில் உறைகின்ற வீரட்டப்பெருமான், மேகம் (மழை) பொழிந்து இழிகின்ற வானுலகத்தோர்க்காக அன்று பக்கத்திலிருப்பவர் நகைக்கும் படி அயனது பொய்ச்சிரத்தை அரிந்து அதில் உணவு கொள்வதில் கொண்ட விருப்பம் ஏன் ?

இறைவனுமாய் - இதில் 'உம்மை' எச்ச உம்மையாகும். இறைவனாய் இருப்பதோடு உலகும் உயிருமாயும், அவற்றுள்

ஊடுருவி நிறைந்தும் நிற்கும் தன்மையைக் குறித்தது. திருவீழிமிழலையில் அருளிச்செய்த "ஈருய் முதல் ஒன்ருய்" எனத் தொடங்கும் திருப்பாடலிலும் இம்மூன்று நிலைகளைக் காணலாம். இம்மூன்று நிலைகளை வேருய், ஒன்ருய், உடனுய் நிற்கும் நிலைகள் எனச் சாத்திரம் கூறும்.

பிரம்மதேவனுடைய செருக்கினைத் தொலைக்கவும், மற்ற தேவர்களின் அஹங்காரத்தை ஒழிக்கவும், முனிவர்களின் இறுமாப்பைப் போக்கவும் சிவபெருமான் வைரவக் கடவுளைத் தோற்றுவித்து அவரைக்கொண்டு அயன் சிரத்தை அரிந்தார் எனக் கந்தபுராணங் கூறுவதால் வானுளோர்களுக்காகச் சிரம் அரிந்தது எனக் கூறியருளினுர் பிள்ளையார். பொய்ச்சிரம் - பொய் பேசியசிரம். தானே முழு முதற் கடவுள் என்று பேசியது, மற்றும் சிவபெருமான் காட்சி யளித்தபோது பெருமானை இகழ்ந்து பேசிய சிரம், அச் சிரத்தையே அரிந்தார் எனப் புராணம் கூறுகிறது. அன்று - அயன் பொய் பேசிய அன்று, பண்டறிசுட்டு என்பர். பொய்ச்சிரம் - அழியும் தன்மையுடைய சிரம் என்பது சிவக் கவிமணியவர்களின் உரை.

திருந்துதொண்டர்கள் செப்புமின்மிகச்
செல்வன்றன்னது திறமெலாம்
கருந்தடங்கண்ணி ஞர்கள்தாந்தொழு
கண்டியூருறை வீரட்டன்
இருந்துநால்வரொ டால்நிழல்அறம்
உரைத்ததுமிகு வெம்மையார்
வருந்தவன்சிலை யாலம்மாமதில்
மூன்றுமாட்டிய வண்ணமே. 7

7. மக்கள் திருந்துதற்கேதுவாகிய தொண்டர்களே! பெருஞ்செல்வனுகிய சிவபிரானது திருவருட்டிறங்கள் எல்லாவற்றையும் கூறுவீர்களாக. கரிய விசாலமான கண்களையுடைய பெண்கள் தொழுந் திருக்கண்டியூரில் வாழ்கின்ற திருவீரட்டானமூர்த்தியானவர் நால்வரோடு இருந்து

கல்லாலமரத்தின் நிழலில் அறமுரைத்ததும் மிகக்கொடுமை யாளர்களான முப்புரத்தசுரர்கள் வருந்தும்படி வலிய மலை யாகிய வில்லினுல் அவர்களுடைய பெரிய மூன்று மதில்களை யும் மாள்வித்ததுமாகியவற்றின் பெருமையைக் கூறுவீர் களாக. மாட்டிய—தீயை மாட்டிய எனலுமாம்.

நாவிரித்தரன் தொல்புகழ்பல
பேணுவீர்இறை நல்குமின்
காவிரித்தடம் புனல்செய்கண்டியூர்
வீரட்டத்துறை கண்ணுதல்
கோவிரிப்பயன் ஆனஞ்சாடிய
கொள்கையும்கொடி வரைபெற
மாவரைத்தலத் தாலரக்கனை
வலியைவாட்டிய மாண்பதே. 8

8. சிவபெருமானுடைய தொன்மையான பல புகழ் களையெல்லாம் நாவினுல் விரிவாக உரைத்துப் போற்று கின்றவர்களே! அகன்ற காவிரிநதி நீர்வளஞ்செய்யும் திருக்கண்டியூர் வீரட்டானம் என்னுமித்தலத்துள் உறை கின்ற கண்ணுதற்கடவுள், பசுக்களினின்றும் கிடைக்கும் பயனுகிய ஆனைந்தினுல் அபிடேகம் கொள்ளும் கொள்கை யும், மலையரசன் மகளாகிய கொடி போன்ற உமாதேவியார் அச்சம் நீங்கி அமைதிபெற பெரிய திருக்கயிலாயமலையினுல் (கால்விரலையூன்றி) அரக்கனுகிய இராவணனது வலியை அடக்கிய மாண்பும் ஏன்? விடை கூறுவீர்களாக.

பெருமையேசர ணுகவாழ்வுறு
மாந்தர்காளிறை பேசுமின்
கருமையார்பொழில் சூழுந்தண்வயற்
கண்டியூருறை வீரட்டன்
ஒருமையாலுயர் மாலுமற்றை
மலரவன் உணர்ந்தேத்தவே
அருமையாலவ ருக்குயர்ந்தெரி
யாகிநின்றவத் தன்மையே. 9

9. (இறைவரின் திருவடிகளே) சரணுக வாழும் வாழ்வே பெருமையுறும் என்ற கொள்கையையுடைய அடியார்களே! இருள் நிறைந்த பொழில்கள் சூழ்ந்தும் குளிர்ச்சி மிக்க வயல்கள் நிறைந்தும் உள்ள திருக்கண்டியூரில் உறையும் திரு வீரட்டப்பெருமான் ஒருமைப்பட்ட மனத்தினுல் (சிவபூசை செய்து அதனுல்) உயர்ந்த திருமாலும் மற்றும் நான்முக னும் உண்மையை உணர்ந்து தம்மைத் துதிக்கும்படி (அடி முடிகாண) அருமையால் அவர்களுக்கு முன்பாக எரியாகி உயர்ந்து நின்ற அத்தன்மை தான் யாதோ? விடை கூறுவீர் களாக.

பெருமையே சரணுக வாழ்வுறு — சரணுக வாழ்வே பெருமையுறும் என மாற்றுக. (சிவக்கவிமணியவர்களின் குறிப்பு). பெருமையே சரணுக—தன் பெருமையே பற்றுக் கோடாக (திருப்பனந்தாள் காசிமடத்துப் பதிப்பில் கண்ட குறிப்புரை), கருமையார் பொழில்—மரங்களின் செறிவால் கதிரவனெளி நுழையாதாகையால் இருள் நிறைந்தபொழில் என்பதாம்.

ஒருமையாலுயர் மாலும்—ஒன்றுபட்ட மனத்தோடு சிவ பிரானை வழிபட்டு அதனுல் திருமால் உலகத்தில் வழிபடு கடவுளாக உயர்ந்தார் என்பது அனைவருமறிந்ததே. அங்ஙன மிருந்தும் அவரும் காணுதாராயினர் ஏன்பது குறிக்க உயர் மாலும் என்று கூறினுர். பிரமன் வழிபடு கடவுளாக உயரா மையால் மற்றை எனப்பிரித்து அவனை மலரவன் என்று வாளா கூறினுர்.

உணர்ந்தேத்தவே அருமையாலவருக்குயர்ந்து எரியாகி நின்ற அத்தன்மை - நான்முகன் தானே உயர்ந்தவன் என் ருன். திருமால் அவனை மறுத்துத் தாமே உயர்ந்தவர் என் ருர். இருவரும் சண்டையிட்டனர். அவர்கள் இருவருமே உயர்ந்தவர் அல்லர், சிவபெருமான் தாமே உயர்ந்தவர் என்பதை அவர்கள் உணர்ந்து தம்மைத் துதிக்கும்படி அவர் கள் மத்தியில் எரியாகி ஓங்கி உயர்ந்து நின்ருர் என்பதாம்.

அருமையால் என்பது அடி முடி காண்டற்கரிய அருமையைக் குறித்தது.

நமரெழுபிறப் பறுக்குமாந்தர்காள்
நவிலுமின்னுனமக் கேட்கின்றேன்
கமரழிவயல் சூழுந்தண்புனற்
கண்டியூருறை வீரட்டன்
தமரழிந்தெழு சாக்கியச்சமண்
ஆதரோது மதுகொளா(து)
அமரரானவர் ஏத்தஅந்தகன்
தன்னைச்சூலத்தில் ஆய்ந்ததே: 10

*10.* நம்மைச் சேர்ந்தவர்களுடைய ஏழு வகையான பிறப்பையும் அறுக்கும் தவமுடைய அடியவர்களே ! உங்களைக் கேட்கின்றேன்; நில வெடிப்புகள் அழிந்த வயல்கள் சூழ்ந்த நீர்வளமுடைய திருக்கண்டியூரில் கோயில் கொண்ட திருவீரட்டப் பெருமான், எந்தவிதமான பயனையும் அடையாது தம் சமயத்தவர்கள் அழியும் சமண சாக்கியராகிய அறிவிலிகள் ஓதுகின்ற உரைகளைக் கொள்ளாதவராயும், தேவர்கள் தம்மைப் போற்றித் துதிசெய்ய அந்தகன் என்னும் அவுணனைச் சூலத்தில் குத்தியதும் ஏன் ? விடை பகருவீர்களாக.

நமர் - நம்மவர்கள், நம்மைச் சார்ந்தவர்கள். ஒரு சிவஞானியால் அவனது சுற்றத்தார் பிறவியறுந்து முத்தியடைகின்றனர் என்பதாம். எழுபிறப்பு - ஏழுவகையான பிறப்பு அல்லது அடுத்தடுத்து எழும் பிறப்பு.

கமரழிவயல் : வயல்களில் உண்டாகும் நில வெடிப்புகள் நீர் நிறைதலால் மறைந்து போகின்றன. அதனையே கமர் அழிவயல் என்றார். இதனால் நீர் வளம் குறிப்பிட்டதாயிற்று.

தமரழிந்தெழு சாக்கியச் சமண்—சாக்கியரும் சமணரும் தவம் என்ற பெயரால் செய்யும் அவத்தினால் இம்மை

மறுமை ஆகிய இருநலன்களையும் இழத்தல் பற்றி தமர் அழிந்து என்றார். இறைவர் அவர்கள் கொள்கைகளை அங்கீகரிக்கவில்லை என்பது குறிக்க அவர்கள் ஓதும் அது கொளா என்றருளிச் செய்தார்.

அந்தகன்—அந்தகாசுரனை இறைவர் காய்ந்த வரலாறு கூர்மபுராணத்துள் உள்ளது. திருக்கோவலூர் வீரட்டம் இந்த வீரம் நிகழ்ந்த இடமாகும். அந்தகாசுரன் இறைவரது சூலத்தினால் குத்தப்பட்டு அதில் கோர்க்கப்பட்ட அந்த நிலையில் ஞானம் பெற்றவனாகி இறைவரைத் தோத்திரம் செய்தான் என்று கூர்மபுராணம் கூறுகிறது.

கருத்தனைப்பொழில் சூழுங்கண்டியூர்
வீரட்டத்துறை கள்வனை
அருத்தனைத்திறம் அடியர்பால்மிகக்
கேட்டுகந்த வினாவுரை
திருத்தமாந்திகழ் காழிஞானசம்
பந்தன்செப்பிய செந்தமிழ்
ஒருத்தராகிலும் பலர்களாகிலும்
உரைசெய்வார் உயர்ந்தார்களே. 11

திருச்சிற்றம்பலம்.

*11.* பொழில்கள் சூழ்ந்த திருக்கண்டியூர் வீரட்டம் என்னும் இத்தலத்தில் எழுந்தருளியுள்ள கருத்தனும், கள்வனும், அருத்தனுமாகிய சிவபிரானது (பரத்துவத்தை நாட்டும்) அருட்டிறங்களையெல்லாம் அடியார்கள்பால் வினாவுரையாகக் கேட்டுப் பெரிதும் மகிழ்ந்த, விளக்கத்துடன் கூடிய சீகாழித் திருஞானசம்பந்தன் செப்பிய திருத்தமாம் செந்தமிழ் மாலையாகிய இத்திருப்பதிகத்தை ஒருவர் தனியாகவோ அல்லது பலர் சேர்ந்து கூட்டாகவோ ஓதுபவர்கள் உயர்வடைவார்கள் (விரைவும் உறுதியும் பற்றி உயர்ந்தார் என இறந்த காலத்தில் கூறியருளினார்).

கருத்தன்—அடியார்கள் மனதில் கருத்து வடிவமானவர் ''மனத்துள் நின்ற கருத்தானை...'' (அப்பரடிகள் ஆலவாய்த் திருத்தாண்டகம், 8) கருத்து—எண்ணம், அபிப்பிராயம், பயன், கவனம், குறிப்பு, சித்தம், சிந்தனை, தாத்பர்யம், நினைப்பு, விருப்பு, விவேகம் முதலிய பல பொருள்கள். இவ்வாறின்றி கருத்தன்—என்பதைக் கர்த்தா என்ற வட மொழிச் சொல்லின் செந்தமிழ் வடிவமாகக் கொண்டு கடவுள், சிவன், செய்பவன் என்றும் பொருள் கொள்ளலாம்.

கள்வன்—'ஒளிக்குஞ் சோரனைக் கண்டனம்' (மாணிக்க வாசகர், திருவாசகம், திருவண்டப்பகுதி—141), ''உள்ளங் கவர் கள்வன்'' (திருஞானசம்பந்தர், திருப்பிரமபுரம்) முதலிய அருள் வாக்குகள் காண்க.

அருத்தன்—சொல்லின் பொருளாயிருப்பவன், பொன், மணி முதலிய பொருளாயிருப்பவன். அருத்தம் - ''அருத்தஞ் சொற்பொருள் பொன்னின்பேர்'' (அரும் பொருள் விளக்க நிகண்டு-412)

தலவரலாறு:—காவிரித்தென்கரைத் தலங்களுள் 12வது தலமான திருக்கண்டியூர் அட்டவீரட்டத் தலங்களுள்ளும் ஒன்றாகும். பிரமன் சிரத்தைச் சிவபெருமான் கொய்த வீரம் நிகழ்ந்த இடம் ''பூமன் சிரங்கண்டி...'' என்ற பழம் பாடற்பகுதி இதனைக் கூறும், ''பண்டு அங்கு அறுத்ததோர் கையுடையான் படைத்தான் தலையை...'' என இத் தலத்துத் திருப்பதிகத்தில் அப்பரடிகளும், இத்தலத் திருப் பதிகம் 6வது பாடலில் ''......வானுளோர்களுக்காக அன்றயன் பொய்ச்சிரம், அயனகவ்வதரிந்து மற்றதில் ஊனுகந்த அருத்தியே'' எனத் திருஞான்சம்பந்தப் பெருமானும் இச்செய்தியைக் குறிப்பிட்டுப் பாடியுள்ளனர்.

திருவையாற்றில் நிகழும் சித்திரைப் பெருந்திருவிழா வில் ஐயாறப்பர் எழுந்தருளும் ''சத்தத்தானம்'' (ஸப்த

ஸ்தானம்) என்னும் ஏழூர்த்திருவிழாப் பதிகளுள் இத்தலமும் ஒன்ருகும். இத்தலத்தில் சூரியபூஜை பிரதி மாசி மாதமும் 13 முதல் 15ம் தேதிவரை நிகழ்கின்றது, சதானந்தர் என்பவர் பூசித்துப் பேறுபெற்ருர் எனக் கூறப்படுகிறது. 'அவரது படிமம் திருக்கோயிலுள் இருப்பது அச்செய்திக்குச் சான்ருக உள்ளது. பிரமன், ஸரஸ்வதி ஆகியோரது உருவங்களும் கோயிலுள் உள்ளன. அப்பரடிகள் திருப்பதிகம் ஒன்று, திருஞானசம்பந்தர் திருப்பதிகம் ஒன்று, ஆக இரண்டு திருப்பதிகங்கள் பெற்ற இத்தலம் தஞ்சாவூர் இரயில் நிலயத்தினின்றும் திருவையாறு செல்லும் வழியில் சுமார் 10 கிலோமீட்டர் தொலேவில் உள்ளது.

இறைவர் திருப்பெயர்—வீரட்டேசுவரர். (வடமொழியில் பிரமசிரக்கண்டீச்வரர்) இறைவியார் திருப்பெயர் - மங்களநாயகி.

சிவம்



## எவ்வாறு உய்வேன் ?

சிறிளமைப் பருவத்தில் எனக்கு வந்தே
சிற்றிடையாள் ஞானப்பால் ஊட்ட வில்லை
பேரிளமைப் பருவத்தில் பெரிய மாற்றம்
பெற்றிடவே நோயேதும் தரவு மில்லை
யாரிளமை துறப்பவர்கள் இல்ல றத்தில்
யானேகும் போதுதடுத் தாண்டா ரில்லை
கூரிளமை ஞானத்தைக் கூட்டி உன்னைக்
கும்பிட்டு வாழ்ந்துஎவ் வாறு உய்வேன்

—பேராசிரியர் டாக்டர் பெ. கு. வரதராசன்



உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருச்சோற்றுத்துறை

பதிகவரலாறு:—திருக்கண்டியூரில் நினைவரியோன் செயலை அடியார்பால் வினவுரையாகக் கேட்டுமகிழ்ந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார், திருச்சோற்றுத்துறையினைத் தொழுவதற்கு விருப்பத்துடன் எழுந்தருளுகின்ற பொழுது வழியில் ''அப்பர் சோற்றுத்துறை சென்றடைவோம்'' என்று பாடிய ஒப்பில் வண்டமிழ்மாலை இத்திருப்பதிகம் எனப் பெரியபுராணங் கூறுகிறது.

பண்—தக்கராகம்] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்ப னென்னு தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமான் ஒளிவெண்ணீற்(று)
அப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 1

பதிகப்பொழிப்புரை: — 1. இல்வாழ்வானுக்குரியதாக தருமநூல்களில் விதித்தபடி ஐம்பொறிகளால் நுகரப்படும் சிற்றின்பத்தையும் 'நான் நுகர்கின்றேன்' என்ற அகங்கார உணர்வோடு கூறாது, இறைவன் திருவருளே துணையாக நுகர்கின்றேன் என்று சொல்ல, எம்பெருமான் அதனையும் ஒப்புவர். அப்படிப்பட்ட (பெருங்கருணைப்) பெருமானும், ஒளி வீசுகின்ற வெண்ணீறு தரித்த அப்பருமான சிவபெருமான் உறையும் திருச்சோற்றுத்துறை சென்றடைவோம்.

நெஞ்சே! நெறிகொள் சிற்றின்பம் துப்பன் என்னாது அருளே துணையாகச் செப்ப ஒப்பர் ஒப்பர் எனக் கூட்டிப்

பொருள் கொள்ளப்பட்டது. ஒப்பர் ஒப்பர் என இருமுறை கூறியது உறுதி பற்றியாம் எனக் கொள்க. நெறி கொள் சிற்றின்பம்—அறநூல்கள் விதித்தபடி நுகரப்படும் சிற்றின்பம்.

ஒளி வெண்ணீற்று அப்பர்—ஒளிவிட்டுப் பிரகாசிக்கும் திருவெண்ணீறு தரித்த இறைவர்: தொலையாச் செல்வர் என்னும் இத்தலத்து இறைவர் பெயரை நினைவூட்டியதுமாம். தொலையாச் செல்வம்—விபூதி (திருநீறு); விபூதிர் பூதிர் ஐச்வர்யம் என வடமொழி அமரம் என்ற நிசண்டு கூறுகிறது.

பாலும் நெய்யுந் தயிரும் பயின்றுடித்
தோலும் நூலுந் துதைந்த வரைமார்பர்
மாலுஞ் சோலை புடைசூழ் மடமஞ்ஞை
ஆலுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே 2

2. பால், தயிர், நெய் இவைகளால் திருமஞ்சனம் ஆடித் தோலாடையும் பூணூலும் தரித்த மலை போன்ற திருமார்பையுடையவரான சிவபெருமானது(சிவபெருமான் எழுந்தருளியுள்ள) மயக்கத்தை உண்டுபண்ணும் சோலைகள் புடை சூழ்ந்த, அழகிய மயில்கள் நடமாடுகின்றதுமான திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

மாலும்—மயக்கும்; அஃதாவது சோலைகளின் உயரத்தினால் பிரமிப்பை உண்டாக்கும் அல்லது மரங்களின் செறிவினால் இருள் செய்து வழி தெரியாது மயக்கஞ் செய்யும் என்பதாகும்.

செய்யர் செய்ய சடையர் விடையூர்வர்
கைகொள் வேலர் கழலர் கரிகாடர்
தைய லாளொர் பாக மாயஎம்
ஐயர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 3

3. சிவந்த திருமேனியையுடையவரும், சிவந்த சடையை உடையவரும், எருதினை வாகனமாகக் கொண்டு

ஏறுபவரும், திருக்கரத்தில் சூலத்தையுடையவரும், வீரக் கழல்களை அணிந்தவரும், சுடுகாட்டை (நடன அரங்கமாக) உடையவரும், உமாதேவியாரை ஒரு பாகமாக உடைய எம்முடைய தலைவருமாகிய சிவபிரானது திருச்சோற்றுத் துறையைச் சென்றடைவோம்.

வேல்—இங்கு சூலம் என்ற பொருளில் வந்தது. ஆயுதப் பொது என்றும் கொள்ளலாம். கரிகாடு—சுடுகாடு; ஐயர்—தலைவர்.

பிணிகொ ளாக்கை யொழியப் பிறப்புளீர்
துணிகொள் போரார் துளங்கு மழுவாளர்
மணிகொள் கண்டர் மேய வார்பொழில்
அணிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 4

4. நோயுற்ற உடலை ஒழிக்கவே எடுத்த இம்மானிடப் பிறவியை உடையவர்களே! (எதிரிகளைத்) துண்டம் செய்கின்ற போரினையுடையவரும், ஒளிவிடும் மழுவாயுதத்தை உடையவரும், மணிகண்டப் பெருமானுமாகிய சிவ பெருமான் விரும்பி எழுந்தருளியிருப்பதும் பொழில்களால் அழகு செய்யப்படுவதுமாகிய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

கிடைத்தற்கரிய மானிடப்பிறவியை அடைந்ததன் பலன் இனிப் பிறவாமையாகிய பேறு பெறுதலேயாம். எனவே ''பிணிகொள் யாக்கை ஒழிய பிறப்புளீர்'' என்று அருளிச்செய்தார்.

பிறையும் அரவும் புனலுஞ் சடைவைத்து
மறையும் ஓதி மயானம் இடமாக
உறையுஞ் செல்வம் உடையார் காவிரி
அறையுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 5

5. பிறைச்சந்திரனையும் பாம்பையும் கங்கை நீரையும் சடைமீதுவைத்து, வேதத்தினையும் ஓதி, மயானமே

இடமாகக்கொண்ட செல்வம் உடையாராகிய சிவபிரான் உறையும் காவிரி மோதிப்பாய்கின்ற திருச்சோற்றுத் துறையைச் சென்றடைவோம்.

ஆபரணமல்லாதவை ஆபரணங்கள், இடமல்லாதது இடம், இருப்பினும் அவரே ஸர்வைச்வர்ய ஸம்பன்னர் என்று உபநிடதம் போற்றும் செல்வராவார் என்பது இப் பாடலால் புலப்படுத்தப்படுகிறது.

துடிக ளோடு முழவம் விம்மவே
பொடிகள் பூசிப் புறங்கா டரங்காகப்
படிகொள் பாணி பாடல் பயின்ருடும்
அடிகள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 6

6. உடுக்கைகளின் ஒலியோடு முழவ ஒலியுஞ் சேர்ந்து பேரொலி செய்யச் சாம்பலைப் பூசி, சுடுகாட்டையே நடன மேடையாகக் கொண்டு பண்புகள் கொண்ட பாடலின் தாளத்திற்கேற்பப் பயின்ருடும் நம் அடிகளாகிய சிவபெரு மான் விரும்பி எழுந்தருளியிருக்கும் திருச்சோற்றுத்துறை சென்றடைவோம். படி—பண்பு.

சாடிக் காலன் மாளத் தலைமாலை
சூடி மிக்குச் சுவண்டாய் வருவார்தாம்
பாடி யாடிப் பரவு வாருள்ளத்
தாடி சோற்றுத் துறைசென் றடைவோமே. 7

7. இயமன் மாளும்படிக் காலால் உதைத்தும் கபால மாலைகளைத் தரித்தும் மிக்கச் சுவண்டாய் வருபவரும், பாடியும் ஆடியும் துதிப்பவர்களுடைய உள்ளத்தாமரையில் ஆடுபவருமாகிய சிவபிரானது திருச்சோற்றுத்துறையை சென்றடைவோம்.

தலைமாலை—'தலைக்குத் தலைமாலை அணிந்ததென்னே..' (நம்பிகள் தேவாரம், திருவஞ்சைக்களம்). சுவண்டாய் - இச்சொல்லின் நேர் பொருள் புலப்பட்டிலது. திருத்

தருமையாதீனக் குறிப்புரையில் ''பொருத்தமாய்'' என்ற பொருள் காணப்படுகிறது. இடம் நோக்கி 'கம்பீரமாய் அல்லது மிடுக்காய்' வருவார் எனவுங் கொள்ளலாம். உள்ளத்தாடி - உள்ளத்தில் ஆடுபவன். இ க ர வீ ற் றுப் பெயர்ச் சொல். 'புடை சூழ்ந்த புலியதள்மேல் அரவாட ஆடி' (நம்பிகள் தேவாரம், திருத்தொண்டத் தொகை-9).

பெண்ணேர் பாகம் உடையார் பிறைச்சென்னிக்
கண்ணேர் பாகங் கலந்த நுதலினர்
எண்ணா தரக்கன் எடுக்க ஊன்றிய
அண்ணல் சோற்றுத் துறைசென் றடைவோமே. 8

8. ஒரு பாகத்திலே பெண்ணையுடையவரும், தலையில் பிறைச்சந்திரனையுடையவரும், நெற்றியில் கண் உடையவரும், பெருமான் திறத்தைச் சிறிதும் எண்ணாது கயிலை மலையையெடுத்த இராவணன் வலிகெடக் கால்விரலால் ஊன்றிய பெருமையில் சிறந்தவருமாகிய சிவபெருமானது திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

எண்ணாது—இறைவரது பெருமையை எண்ணாது அல்லது தன் செயலால் தனக்குப் பின் வரக்கூடிய துன்பத்தை எண்ணாது.

தொழுவா ரிருவர் துயரம் நீங்கவே
அழலா யோங்கி அருள்கள் செய்தவன்
விழவார் மறுகில் விதியால் மிக்கஎம்
எழிலார் சோற்றுத் துறைசென் றடைவோமே. 9

9. இறைவரது திருமுடியும் திருவடியுங்காணாது வருந்திப் பின் தொழுத பிரமனும் திருமாலும் அடைந்த துயரம் நீங்கும்படி சோதியாய்த் தோன்றி அருள்செய்த பரமன் உறைவதும், விழாக்கள் நிறைந்த திருவீதிகளையுடையதும், வேதநெறி மிகுந்ததுமான திருச்சோற்றுத் துறையைச் சென்றடைவோம்,

கோது சாற்றித் திரிவார் அமண்குண்டர்
ஓதும் ஒத்தை யுணரா தெழுநெஞ்சே
நீதி நின்று நினைவார் வேடமாம்
ஆதி சோற்றுத் துறைசென் றடைவோமே. 10

*10.* குற்றமுள்ள வார்த்தைகளையே சொல்லித் திரிகின்றவர்களாகிய சமண்குண்டர்கள் ஓதுகின்ற அவர்களுடைய நூலைச் சிறிதும் மதியாது, ஏ, நெஞ்சமே! நீ எழுவாயாக. வேதாகம நெறியின்கண் நின்று நினைப்பவர்களுடைய நினைவுக்கேற்ப உருக்கொண்டு அவர்கட்கருளும் ஆதி முதல்வனாகிய சிவபெருமானின் திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

ஒத்து—ஓதப்படுதலின் ஒத்து. வேதம் என்ற பொருளில் வழங்கும் இச்சொல் இங்குச் சமணர்களுடைய நூல்களைக் குறித்தது.

அந்தண் சோற்றுத் துறைஎம் ஆதியைச்
சிந்தை செய்ம்மின் அடியா ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே. 11

திருச்சிற்றம்பலம்

*11.* அடியர்களாயினீர், அழகியதும் குளிர்ச்சி பொருந்தியதுமான திருச்சோற்றுத்துறை மேவிய ஆதி முதல்வனாகிய சிவபெருமானைத் தியானஞ் செய்யுங்கள். இசையுடன் கூடிய (அல்லது அழகிய) பாடல்களால் பரவுகின்ற திருஞானசம்பந்தன் உள்ளத்தே (இறைவனருளால்) வந்தவாறேயமைந்த இத்திருப்பதிகத்தைப் போற்றிப்பாடுதலே வழிபாடாகும்.

சந்தம்—இசை, அழகு—இங்கு இவற்றை உடைய பாடல்களைக் குறித்தது. வந்தவாறே—இது திருஞான

சம்பந்தப்பெருமான் அருளிய பாடல்கள் எல்லாம் இறைவர் திருவருளாலேயே அவர் உள்ளத்தில் தோன்றின என்பதைத் தெளிவாகக் குறிப்பிட்டதாம்.

திருச்சோற்றுத்துறை—இப்பதிசப் பாடல்களில் வந்துள்ள அப்பர் சோற்றுத்துறை, ஐயர் சோற்றுத்துறை, அடிகள் சோற்றுத்துறை, அண்ணல் சோற்றுத்துறை போன்றவை அப்பர் - ஐயர் - அடிகள்-அண்ணல் கோயில் கொண்டுள்ள சோற்றுத்துறை என்று பொருள் தருவதேயல்லாமல் அப்பராகிய சோற்றுத்துறை ஐயராகிய சோற்றுத்துறை, அடிகளாகிய சோற்றுத்துறை, அண்ணலாகிய சோற்றுத்துறை, அஃதாவது சோறு பெறும் துறை அல்லது வழங்கும் துறை என்ற பொருளும் தருதல் காண்க. சோறு என்ற சொல் உணவு என்ற பொருள்தருவதேயல்லாமல் 'நற்பயன்' என்றும் பொருள் தரும். ''பாதகமே சோறு பற்றினவா தோணோக்கம். (திருவாசகம்-திருத்தோணோக்கம்—7).

தலவரலாறு:—காவிரிக்குத் தென்கரையில் பதின்மூன்ருவது தலமாகிய திருச்சோற்றுத்துறை திருவையாறு உள்ளிட்ட சப்தஸ்தானம் எனப்படும் ஏழு தலங்களுள் ஒன்ருகும். தற்காலம் திருச்சத்துறை எனவும் வழங்கப்படுகிறது. அருளாளன் என்ற அந்தணனுக்கு எடுக்க எடுக்கக் குறையாத அட்சய பாத்திரம் அளித்ததலம். பஞ்ச காலத்தில் அடியார்களுக்கு அன்னமிட்டுக்காத்த பெருமானின் தலம் என்றும் தல வரலாறு கூறுகிறது. தேவீபாகவதம் போன்ற நூல்களில் பஞ்சகாலத்தில் அன்னமிட்டுக் காக்கும் ஆற்றலைத் தவத்தால் பெற்றுப் பசிநோய் நீங்கப் பெருஞ்சோறு அளித்ததாகக் கூறப்படும் கௌதமமுனிவர் தவஞ்செய்த இடமாகையால் கௌதமாச்ரமம் எனவும் வழங்கப்படும். இத்தகைய தல மஹிமைகளையும், இத்தலத்து இறைவன், இறைவியரையும் மனதில் கொண்டு இத்திருப்பதிகத்தை பக்தியுடன் ஓதும் அன்பர்கள் தாங்களும் பசிநீங்கிப் பிறர் பசியையும் போக்கும் ஆற்றல் பெறுவார்கள் என்பது உறுதி.

இந்திரன், சூரியன் முதலியோர் பூசித்த தலம். சூரியன் வழிபட்ட செய்தியை ''செங்கதிரோன் வணங்கும் திருச் சோற்றுத்துறை நாதன்'' என்று அப்பர் பாடிய இத்தல நேரிசையால் அறியலாம். தேவார மூவர் பதிகங்களும் பெற்ற இத்தலம் திருக்கண்டியூருக்குக் கிழக்கே சுமார் 2½ கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது.

இறைவர் திருப்பெயர்—தொலையாச் செல்வர்; இறைவி யார் திருப்பெயர்—ஒப்பிலாவம்மை. சோறளித்த வரலாறு பற்றி இறைவரும் இறைவியும் முறையே ஓதனவனேசுவரர் எனவும் அன்னபூரணி எனவும் வழங்கப்படுவர். ஓதனம்—சோறு.

சிவம்.

---

உ

# ஸகல காரியசித்தியும் சைவத்திரு முறைகளும்

சென்னை தியாகராயநகர் லிட்டில் பிளவர் கம்பெனி யாரால் 1969லும் பின்னர் 1980லும் வெளியிடப்பட்ட இந்த நூல் இடையில் நீண்ட காலம் இடைக்காமலிருந்து இப்போது மீண்டும் அச்சிடப்பெற்று அன்பர்களுக்குக் கிடைக்கும் நிலையில் உள்ளது என்பதைப் பெரிதும் மகிழ்ச்சி யுடன் தெரிவித்துக் கொள்கிறோம். 280 பக்கங்கள் கொண்ட இந்த நூலின் விலை ரூ. 15/-மட்டுமே. (தபால் செலவு தனி). தி லிட்டில் பிளவர் கம்பெனி, ரங்கநாதன் தெரு, தி. நகர், சென்னை-600 017 என்ற முகவரியில் கிடைக்கும். ஆங்கிரஸ சு. வேங்கடேச சர்மா, 43, ஏழாவது அவென்யு, அசோகநகர், சென்னை-600 083 என்ற எமது முகவரியிலும் பெறலாம். தேவைக்கு எழுதுக.

சிவம்

# திருஞானசம்பந்தப் பெருமான் புகழ்மாலை

பேராசிரியர் டாக்டர் பெ. கு. வரதராசன்
கிருஷ்ணகிரி

மண்ணுலகில் பன்னிருபேர் ஒரு ருக்கே
மதித்திட்டு வழங்கிடுவ தொன்றே யாகும்
கண்ணுதலான் திருக்கோயில் கொண்ட ஊரே
காசினியில் சீகாழி என்ப தாகும்
புண்ணியத்தின் தவப்பயனுல் புன்மை பூண்ட
புல்லர்களை அழிப்பதற்கே பூமி வந்தான்
எண்ணில்பல அதிசயமும் தொண்டு மாற்றி
ஈடேற்றி னுன்தமிழைச் சைவ மோங்க. 1

திருஞான சம்பந்தன் தெய்வம் வாழத்
திருமுலைப்பால் தேர்ந்தளித்தாள் தெய்வ சக்தி
பெருஞானம் வரப்பெற்றுன் பித்த னுக்கே
பிள்ளையென இவ்வுலகில் வாழ்ந்து காட்டி
தருஞானத் தமிழ்மொழியைச் சைவத் தோடு
தந்திட்டான் தேவாரப் பாக்க ளாக
குருஞானம் பெற்றுனு? இல்லை ! இல்லை !
குருவாகப் பிறரேற்க வாழ்ந்தா னம்மா !. 2

சிவபாத விருதயரும் சிந்தை மேவும்
சினங்கொள்ளா பகவதியும் சேர்ந்து பெற்ற
அவமேவா கவுணியர்தம் கோத்தி ரத்தின்
ஆணரசாய்ப் பிறந்தவனே சுத்த ஞானி
பவமேவா சைவத்தின் தந்தை யாவான்
பாரிலுள்ளோர் தாமறியப் பாவி னத்தின்
தவயோகி சிவஞானக் கன்று மாவான்
தாரணியில் இருளோட்டும் ஞான பானு. 3

நனிபள்ளி முதலாக நல்லூ ரீருய்
நானிலத்தில் இருநூற்றுப் பத்து மொன்பான்
கனிமொழியாம் இறைவியுடன் ஈசன் வாழும்
கருணைபா லித்திடும் ஊர்கள் சென்று
புனிதமுறும் முந்நூற்று எட்டு பத்து
பூர்த்தியுற நால்பதி கங்கள் பாடித்
தனிச்சிறப்போ டுயர்ந்துய்ந்தான் ஞான வள்ளல்
தமிழுக்கே உயிர்கொடுத்துத் தானும் வாழ்ந்தான். 4

இறைவனிடம் பொற்றுளம் காசு பெற்றுன்
இரவிதுயர் நீங்குதற்கே முத்துப் பந்தல்
உறைவிடம்விட் டோரிடம்செல் சிவிகை பெற்றுன்
உற்றவரைப் பெற்றவரை விட்டு வந்த
கறைபடா செட்டிப்பெண் கூட்டி வந்த
காளையுயிர் பெறவைத்தான் காழி மன்னன்
துறையறிந்து தேவாரம் படிப்ப வர்க்கு
துணையவனே கற்றவர்கள் துணிந்து சொல்வர். 5

நாவரச ருடன்கூடி அடியார்க் கெல்லாம்
நல்லுணவு பாலித்தான் நித்த நித்தம்
பாவரசர் திருவீழி மிழலை தன்னில்
பட்டினியால் வாடாமல் பார்த்துக் கொண்டான்
மூவரசர் ஆண்டதமிழ் நாட்டில் சைவம்
முளைத்தெழுந்து ஓங்குவதை நாளும் கண்டு
சாவதையும் மறந்தவர்கள் சமணர் கூட்டம்
சமரறியா தழித்தவனே சரப மன்னுன். 6

சுட்டெரித்த சாம்பலையும் பெண்ணு யாக்கி
சூலறியாப் பனையினையும் காய்க்கச் செய்து
பட்டறிந்த பாண்டிமா தேவி வேண்ட
பாங்கறிந்த குலச்சிறையார் துணையி னேடும்

விட்டதீ மன்னனையே சாரச் செய்து
வேள்வியன்றோ மதுரையினில் கடன் முடித்தான்
சட்டமதே சைவநெறி ஓங்க வென்று
சாதித்த பெருமகனும் சம்பந் தன்தான். 7

''ஆளுடைய பிள்ளையார்'' என்ற பட்டம்
யார்பெற்றார் அவனியிலே இவனை யன்றி
தாளுடைய பொற்சதங்கை விட்ட ஓசை
தானழுதல் கேட்டன்றோ தாயு மானன்
கீளுடையான் உமையவளை வேண்ட வன்றோ
கிழிறங்கி மேலமுதம் ஊட்ட வைத்தான்
நாளுடைய உயிர்போற்றும் நாதன் நாமம்
நாமறியச் செய்தவனும் நமச்சி வாய. 8

அந்தாதி திருச்சண்பை விருத்த மான
அழகியமும் மணிக்கோவை உலாவு மாலை
சொந்தாசைக் கலம்பகமும் தொகையும் பாடி
சுகித்தானே நாரையூர் நம்பி யாண்டார்
வந்தாரை வணங்கினன் ! வள்ளல் ஞான
சம்பந்த முடையானை அன்றி வேறு
கந்தாரைக் கொண்டுய்ந்தான்! காணல் வேண்டும்
கற்றோர்கள் பின்பற்றி வாழ வேண்டும். 9

பேசுகின்ற செந்தமிழும் பேணும் சைவப்
பெருந்தகையார் போற்றுகின்ற பாதப் போதில்
கூசுகின்ற ஒளிச்சதங்கை கூவி யன்பால்
கூட்டுவிக்கும் அடியாரை என்று சொன்னல்
வீசுகின்ற தென்றலெதிர் முட்டும் விண்ணை
வியப்போடு பார்த்திருக்கும் மலையைக் கூட
தேசுபெறச் சிறப்பிக்கும் சிவக்க ளிற்றின்
தேன்சிதறும் தேவாரப் பாடல் கற்றே. 10

சிவம்.

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

## வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்]
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

—திருஞானசம்பந்த சுவாமிகள் அருளியது.

---

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்



KOVILOOR ANDAVAR LIBRARY, KOVILOOR
A. No. 15189

யத்யத் கர்ம கரோமி
தத்ததகிலம்
சம்போ தவாராதனம்

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# திருமுறைப் பெருமை

1. தமிழ் வேதங்களாகிய திருமுறைகள் இறைவனால் அவனடியார்கள் மூலம் அருளப்பட்டவை.

2. தமிழ் வேதங்களாகிய தேவாரத் திருமுறைகள் இறைவனால் விரும்பிக் கேட்கப்பட்டவை.

3. தமிழ் வேதங்களாகிய தேவாரத் திருமுறைகளை விரும்பியே இறைவர் பொற்காசு கொடுத்தார்.

4. தமிழ் வேதங்களாகிய தேவாரத் திருமுறைகளால் பெறமுடியாத பேறுகள் உலகில் யாதுமில்லை.

5. தமிழ் வேதங்களாகிய தேவாரத் திருமுறைகளால் பெறமுடியாத பேறுகளை வேறு எம்முறையினாலும் பெறவே முடியாது.

—சிவ. ஆ. பக்தவச்சலம், தலைவர்,
சிவனடியார் திருக்கூட்டம்,
குடியாத்தம் - 632 602.

சிவம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## (சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

பன்னிரு திருமுறைகளில் முதல் ஏழு திருமுறைகளான தேவாரத் திருப்பதிகங்களைப் பொழிப்புரை, விசேடவுரை, பதிகவரலாறு, தலவரலாறு, புராணவரலாறு முதலிய உரை விசேடங்களுடன் 108 தமிழ் மாலைகளாகப் பிரசுரித்துச் சிவ பெருமானின் 108 திருநாமங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒரு தமிழ் மாலையாகச் சமர்ப்பிக்கும் இந்த திட்டத்தில் இது வரை 25 மாலைகள் வெளிவந்துள்ளன.

1 முதல் 24 வரையுள்ள தமிழ் மாலைகள்
24ம் சேர்த்து சலுகை விலை.. ரூ. 60-00

25-வது தமிழ் மாலை முதல் ஒவ்வொரு
மாலையும் தனிப்பிரதி விலை... ரூ. 6-00

ஒவ்வொரு ஆறு தமிழ் மாலையும் சலுகை விலை... ரூ. 30-00

1 முதல் 108 தமிழ் மாலைகளுக்கு
முன் பண உதவிச் சலுகை விலை.. ரூ. 320-00

சலுகை விலை முன்பணமாகச் செலுத்தப்பட வேண்டும். ஒரு ஆண்டுக்குள் தவணைகளாகவும் செலுத்தலாம்.

முன்பணம் கிடைத்தவுடன் இதுவரை பிரசுரமான தமிழ் மாலைகள் உடனடியாக அனுப்பப்பட்டு மற்றவை பிரசுரமானதும் உடனுக்குடன் அனுப்பி வைக்கப்படும்.

உரையாசிரியர்—பதிப்பாசிரியர்

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
43, ஏழாவது அவென்யூ,
அசோகநகர், சென்னை - 600 083.


Elaugo Achukoodam, 166, R H. Road, Ms-4. Tel: 74121.